# முன்னுரை

பழந்தமிழ் நூல்களைப்பற்றித் தொடர்ச்சியாகப் பிரசங்கங்கள் செய்து வரவேண்டுமென்று மயிலாப்பூர் இந்திய இளைஞர் சங்கத்தினர் (Y. M. I. A.) ஒரு முறை கேட்டுக்கொண்டனர். அவர்கள் விருப்பத்தின்படியே செய்யத் தொடங்கி முதலில் தமிழின் பழமையையும், அப்பால் இப்போது கிடைக்கும் தமிழ் நூல்களுள் மிகப் பழையதாகிய தொல்காப்பியத்தையும் பற்றிப் பேசினேன். தொல்காப்பியத்தை இலக்கணம் என்ற வகையிலே பாராமல், பழந்தமிழர் வாழ்க்கை இன்னபடி இருந்தது என்பதைத் தெரிந்துகொள்ள உபயோகமாகக் கிடைக்கும் பழைய சாட்சி என்ற அளவிலே பார்த்தால் என்ன என்ன செய்திகளை உணரலாம் என்ற ஆராய்ச்சியாக என் பிரசங்கங்கள் அமைந்தன.

எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற மூன்று அதிகாரங்களிலுள்ள செய்திகளையும் இவ்வாறு பார்த்துத் தொகுத்துப் பேசியபோது, கேட்ட அன்பர்கள், நான் பேசியதில் விளங்காத விஷயம் ஒன்றும் இல்லை என்று சொன்னார்கள். அப்பிரசங்கங்களை எழுத்துருவத்தில் அமைக்க வேண்டும் என்றும் சில அன்பர்கள் கூறினார்கள். அவ்வாறே செய்ய நினைத்து 'ஹநுமான்' பத்திரிகையில் வாரந்தோறும் எழுதிவந்தேன். எழுத்ததிகாரம் முடிந்தவுடன் வந்தவற்றைத் தொகுத்துப் புத்தக வடிவில் அமைக்கப் புகுந்தேன். பத்திரிகையில் வெளியான கட்டுரைகளைப் புதுக்கியும் திருத்தியும் கூட்டியும் குறைத்தும் சில புதிய பகுதிகளைச் சேர்த்தும் இதனைச் சித்தம் செய்தேன்.

தமிழர் மிகப் பழஞ் சாதியினர். பல பல நூறு ஆண்டு களுக்கு முன்பே நாகரிக வாழ்க்கையில் தலைநிமிர்ந்து நின் றனர். நல்லுணவுண்டு, அழகிய ஆடை உடுத்து, எழிலணி புனைந்து வாழ்ந்தனர். மரங்களைப் போற்றி அவற்றால் வரும் பயனை நுகர்ந்து சிறந்தனர். பூவும் கனியும் அவர் வாழ்வில் மணத்தையும் சுவையையும் பெருக்கின. ஆணும் பெண்ணும் இசைந்து காதல் வாழ்வில் இன்பம் கண்டனர். அன்புடையார் தொடர்பில் வேணவாப் பூண்டும், பகையுடையார்பால் முரண்கொண்டும், காதலை யும் போர் வீரத்தையும் வளர்த்தும் வாழ்ந்தனர். கம்மக் கலனும் கன்னக் கலனும் அணியவும் வழங்கவும் தொழி லாளர் செய்து தந்தனர். பன்னும் பஞ்சை நூற்று ஆடை யாக்கி அணிந்தனர். நெல்லை அளந்தும் பொன்னை வழங்கியும் வாணிகம் நடத்தினர். அளந்தும் நிறுத்தும் எண்ணியும் பண்டங்களை வாங்கினர். உழவும் தொழிலும் வாணிகமும் அவர் துறைபோன செயல்கள்.

இந்தச் செய்திகளைத் தொல்காப்பியத்தின் மூலமாக உணரலாம். வாழ்க்கையில் வழங்கும் பண்டங்களையும் செயல்களையும் பேச்சில் வழங்குவது மக்கள் இயல்பு. பண்டம் இருந்தால் அதுபற்றிப் பேச்சு உண்டு. பேச்சு உண்டு என்றால் அதற்குப் பொருளாகிய பண்டமும் இருக்க வேண்டும். தொல்காப்பியம் மொழியின் இலக் கணம். மொழி வாழ்விலே கருவியாக உதவுவது. வாழ்வு இல்லாவிட்டால் மொழி இல்லை. மொழி இல்லையேல் இலக்கணம் இல்லை. எனவே மொழியிலக்கணத்தில் வாழ் வைக் குறிக்கும் செய்திகள் இருக்கத்தான் வேண்டும். தொல்காப்பியத்தின் மூலம் பண்டைத் தமிழர் வாழ்க் கையை உணரலாம் என்பதற்கு இதுவே காரணம். தமி ழர் வாழ்க்கை அவ்வளவையும் அப்படியே இலக்கண நூலால் தெரிந்துகொள்ள முடியாது. ஆனாலும் ஒரு சிறு புழை மூலமாகப் பார்ப்பது போலப் பார்க்கலாம். அப்

படிப் பார்த்துத் தெரிந்ததைச் சொல்லுவதே இந்தப் புத்தகம்.

முன் பிரிவுகளில் பழந்தமிழ் வரலாற்றைச் சுருக்கமாகச் சொல்லியிருக்கிறேன். ஆராய்ச்சி முறையில் கால நிர்ணயம் செய்யவில்லை. தடையில்லாமல் படிக்க முடியும் வகையில் செய்திகளை உணர்த்தலானேன். இதில் தொல்காப்பியத்தில் உள்ள இலக்கணச் செய்திகள் இருக்கின்றனவென்று எதிர்பார்க்க வேண்டாம். பாடம் கேளாமல் தொல்காப்பியத்தைத் தெரிந்துகொள்வது முடியாத காரியம். அதற்குமுன் ஏறவேண்டிய படிகள் பல உண்டு. இருந்தாலும் அதில் என்னதான் இருக்கிறது என்பதைப் பிண்டமாகத் தெரிந்துகொள்ள இப்புத்தகம் சிறிது உதவும்.

தொல்காப்பியத்துக்குப் பலர் உரை வகுத்திருக்கிறார்கள். எழுத்ததிகாரத்துக்கு இளம்பூரணர் உரையும், நச்சினார்க்கினியர் உரையும் இப்போது வழக்கில் உள்ளன. பாயிரத்திற்கும் முதல் சூத்திரத்திற்கும் மிக விரிவான விருத்தியுரையைச் சிவஞான முனிவர் எழுதியிருக்கிறார். சோழவந்தான் அரசஞ்சண்முகனார் சில சூத்திரங்களுக்கு விருத்தியுரை எழுதியிருக்கிறார். நச்சினார்க்கினியர் உரையையே புலவர்கள் விரும்பிப் படித்து வருகிறார்கள்.

சொல்லதிகாரத்துக்கு இளம்பூரணர் உரையும், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் என்பவர்களின் உரையும் புத்தகமாக வந்திருக்கின்றன. கல்லாடர் உரையும், வேறோராசிரியர் உரையும் ஏட்டுச்சுவடியாக இருக்கின்றன. இவற்றில் சேனாவரையர் உரை சிறந்தது என்பர்.

பொருளதிகாரத்திற்கு இளம்பூரணர் உரையும், முதற் பகுதிக்கும் செய்யுளியலுக்கும் நச்சினார்க்கினியர் உரையும், பிற்பகுதிக்குப் பேராசிரியர் உரையும் இப்போது கிடைக்கின்றன.

*இப்புத்தகத்தில் உள்ள செய்திகளிற் பெரும்பாலன தொல்காப்பிய மூலத்தைப் பின்பற்றியே எழுதப் பெற்றன. சில இடங்களில் நச்சிஞர்க்கினியருடைய உரையைத் தழுவிய செய்திகள் வருகின்றன.*

*இதுபோலவே சொல்லதிகாரத்தையும் பொருளதிகாரத்தையும் பற்றித் தனித்தனியே எழுத எண்ணியிருக்கிறேன். 'இலக்கண நூல் முழுதும் வேப்பங்காய்' என்ற எண்ணம் போய், 'யாவரும் தெரிந்து கொள்வதற்கு உரிய விஷயங்களும் அதில் உள்ளன' என்று இதைப் படிப்பவர்கள் உணர முடிந்தால், இந்த முயற்சி வெற்றி பெற்றது என்ற ஆறுதலை அடைவேன்; பார்க்கலாம்.*

**கி. வா. ஜகந்நாதன்.**

# குறிப்பு

இதை எழுதிய பிறகு சொல்லதிகாரத்தைப்பற்றிய கட்டுரைகள் அடங்கிய புத்தகத்தை, '**வாழும் தமிழ்**' என்ற பெயரோடு வெளியிட்டிருக்கிறேன். தொல்காப்பியத்தைப் பல ஆண்டுகளாக வித்துவான் பரீட்சைக்காகப் பலர் கற்றுவருகிறார்கள். என்றாலும் அதைப் பற்றிய ஆராய்ச்சி இன்னும் தக்கவண்ணம் உருவாக வில்லை. இப்போது கிடைக்கும் தமிழ் நூல்களில் காலத்தால் மிகப் பழையது அது. உலகத்தில் அது தோன்றிய காலத்தில் தோன்றி இன்றளவும் உயிர்வைத்துக்கொண்டிருக்கும் நூல்களை எண்ணிவிடலாம். அவற்றிலும் இப்போதும் பயன்பட்டுவருபவைகள் பின்னும் சிலவே. அந்தச் சிலவற்றுள் தமிழர்களின் வாழ்க்கை விரிவையும் மொழிச் சிறப்பையும் அறிவு நுட்பத்தையும் காட்டுவது தொல்காப்பியம். இந்தக் கருவூலத்தைப் பலவகையில் ஆராய்ந்து பல நூல்கள் எழுத இடம் உண்டு. தமிழ் அன்பு வரவர மிகுதியாகி வரும் இந்நாளில் தமிழாராய்ச்சியும் ஆழமும் அகலமும் உடையதாக வளரவேண்டும். தங்கள் விருப்பு வெறுப்புக்களையும், நூல் தோன்றிய காலத்தின் நினைவையே அடியோடு மறந்து பொருள் செய்யும் தன்மையையும் விலக்கி, நேர்மையான முறையில் ஆராய்ச்சி செய்து தங்கள் கருத்தை அறிஞர்கள் வெளியிடும் காலம் வரவேண்டும்.

இந்த இரண்டாம் பதிப்பில் புதிய மாற்றம் ஒன்றும் நான் செய்யவில்லை. இந்தப் புத்தகத்தைப் பாராட்டிப் பல அன்பர்கள் கடிதம் எழுதினார்கள்; மதிப்புரையையும் வெளியிட்டார்கள். அவர்களுக்கெல்லாம் என் நன்றி.

15-12-53. கி. வா. ஜ.

# பொருளடக்கம்

1

# தமிழின் பழமை

உயிர்த் தொகுதியில் மனிதன் சிறந்தவனாக இருக்கிறான். அவனுக்குப் பகுத்தறிவு இருப்பதனால் கண்ணால் கண்டும் காதால் கேட்டும் பிற பொறிகளால் உணர்ந்தும் தெரிந்துகொண்டவற்றை வேறு பிரித்து அறிந்தும், மறவாமல் நினைந்தும், தொடர்பு படுத்திச் சிந்தித்தும் வாழ்கிறான். இந்த ஆற்றல் மாட்டுக்கு இல்லை ; எறும்புக்கு இல்லை.

மற்றொரு முக்கியமான வேற்றுமையைப் பிராணிகளிடத்திலே பார்க்கிறோம். வாயில்லா ஜீவன்களாகிய விலங்கினங்களுக்குப் பேசத் தெரியாது. மனிதன் பேச்சென்னும் அற்புதமான வரத்தைப் பெற்றிருக்கிறான். 'விலங்குகளுக்கும் பாஷை உண்டு. ஒவ்வோர் இனத்துக்கும் ஒவ்வொரு பாஷை இருக்கிறது' என்று சொல்பவர்கள் இருக்கிறார்கள். அதில் உண்மையும் உண்டு. ஆனால் அந்தப் பாஷை, பச்சைக் குழந்தையின் பாஷையைப் போன்றது. சிலவகை ஒலிகளுக்குள்ளே உணர்ச்சிகளை வெளியிடும் பாஷை அது. அழுகை, சிரிப்பு, ஹூம் என்று சொல்வது - இவ்வாறு உள்ள ஐந்தாறு ஒலிகளே குழந்தையின் வாக்கிலிருந்து உண்டாகும் பாஷை ; அது போலவே விலங்கினங்களின் பாஷை இருக்கிறது என்று சொல்லலாம்.

மனிதனுடைய பாஷையோ அவனது உள்ளக் கருத்தை இயன்ற வரையில் தெளிவாகச் சொல்லும் கருவியாக இருக்கிறது. பல மனிதர்கள் தமக்குள்ளே அமைத்துக் கொண்ட வரையறைக்குள் அடங்கி ஒரு பொதுமைப் "பண்பைப் பெற்றிருக்கிறது. தேசத்தின் வட கோடியில் உள்ள குழந்தை கல்லைக் கல்லென் கிறது ; தென் கோடியில் உள்ள கிழவனும் அதைக் கல்லென்றே சொல்கிருன். இது இயற்கையாகவே அமைந்த நியதியைப் போலத் தோன்றும் கட்டுப்பாடு. இதனுல்தான் பாஷையின் உபயோகம் அதிகமாகிறது. இந்தப் பொதுக் கட்டுப்பாடு இல்லாவிட்டால், வீட்டுக்கு ஒரு பாஷையாக, குடும்பத்துக்கு ஒரு பாஷையாகப் பாஷைகள் முளைத்திருக்கும் ; பலருக்குப் பயன் படாமையால் அவை சில காலம் இருந்து மறைந்து போயிருக்கும்.

இன்ன பொருளை இன்ன ஒலியினுல் குறிப்பது என்ற வரையறையை உணர்ந்து, அப்படியே ஒருவரைப் போலவே பிறரும் வழங்கி வந்ததனுல்தான் பாஷையானது பல இடங்களுக்குப் பரவிப் பல காலமாக நிலவி வருகிறது. ஓர் இன மக்கள் தம்முடைய முயற்சியினுல் உலகத்தில் பல இடங்களுக்குச் சென்று வாழத் தொடங்கினுல் அவ்வினத்தோருக்குரிய மொழி அதிகமாகப்பரவுகிறது. இன்று ஆங்கிலமொழி உலகத்தில் பல இடங்களிலே பரவியிருப்பதற்குக் காரணம், அந்த மொழியினிடம் மக்களுக்குள்ள விருப்பம் அன்று ; அதனைப் பேசும் இனத்தார் தம் முயற்சியைப் பல நாடுகளிலும் பரப்பி ஊன்றிக்கொண்டது தான் காரணம்.

பாஷை முதலில் மனிதனுடைய அன்ருட வாழ்வுக்கு உபயோகப்படும் கருவியாகவே தோற்றியது. அற்றைக் கூலி பெற்று வாழும் தொழிலாளி ஒருவன் நாளடைவில் பணத்தைச் சேமித்து வைக்கிருன். அது போலப் பாஷையில் தினந்தோறும் உபயோகப்படாத சேமிப்பு நிதி ஒன்று திரண்டது. ஓடி ஆடி, தொழிலும் வியாபாரமும் செய்து வாழும் வாழ்க்கையில் அவசியமாக இருக்கும் பாஷைக்குப் புறம்பே, பழமையையும் புதுமையையும் நினைக்கவும் சிந்திக்கவும் பயன்படும் ஒரு பகுதி தோன்றலாயிற்று. சிந்தனுலோகத்தில் அந்தப் பகுதி வளர்ந்தது. அதுதான் இலக்கியம். மனிதன் தினந்தோறும் சோறும் நீரும் உண்கிருன். பாயசமும் பட்சணமும் விழாக்களில் உண்ணுகிருன். அவ்வாறே பாஷையில் இலக்கியம் வந்தது. மனிதன் வெயிலுக்கும் மழைக்கும் ஒதுங்க நிழல் தேடியது ஆரம்ப காலக் கதை. பிறகு அவன் மாட மாளிகை கூட கோபுரங்களைக் கட்டினுன்; இலையாலும் தழையாலும் உடை உடுத்து மானத்தைக் காப்பாற்றியது போய்ச் சித்திரத் துகிலும் செம்பொன்னுடையும் புனையலானுன். அவன் பேசிய பாஷையிலும் இப்படியே அவனது கருத்து வளம் பெறப் பெற இலக்கியங்கள் வளர்ந்தன.

ஒரு பாஷையைப் பேசும் மனித சமுதாயத்தினர் நெடுங்காலமாக வாழ்ந்தாலும், உயர் நிலையில் வாழ்ந்தாலும் அவர்களுடைய பாஷையில் இலக்கியங்கள் பெருகும். உயர் நிலையில் வாழும் மக்களால் பேசப் பெருமையால், இன்னும் இலக்கியங் காணுமல் காட்டுமிராண்டிகளின் பாஷையாக நிற்கும் மொழிகள் பல

உலகத்தில் இருக்கின்றன. மனிதனது வாழ்க்கையில் அடிப்படையாக உள்ள உணர்ச்சிகளையும் செயல்களை யும் குறிக்கும் வார்த்தைகளும் வாக்கியங்களும் அந் தப் பாஷைகளில் இருக்கலாம். அம்மக்கள் கட்டிக் கொண்டு வாழும் தழைக் குடில்களைப் போல, அவர் கள் உண்டு வாழும் ஊனையும் பழங்களையும் போல, அந்தப் பாஷைகள் வாழ்க்கைக்கு இன்றியமையாதன வாகிச் சுருக்கமாக உள்ளன. அவர்கள் ஊரில் மாட மாளிகை இல்லை ; அவர்கள் உண்ணும் உணவில் அல்வா இல்லை ; அவர்கள் ஆடையில் சரிகை இல்லை ; அவர்கள் பாஷையில் இலக்கிய வளம் இல்லை.

பல காலம் நல் வாழ்வு வாழ்ந்த மக்களின் பாஷையோ இலக்கிய வளம் பெற்று விளங்கும். தமிழ்மொழி பலகாலம் வாழ்ந்து வரும் மனிதக் கூட் டத்தினரின் பாஷை ; மிக நன்ருய் வாழ்ந்த மக்களின் பாஷை. ஆதலின் நிச்சயமாக இதில் இலக்கிய வளம் சிறந்து நிற்கத்தான் வேண்டும். தமிழனது வாழ்வின் உன்னத நிலையை அவன் கட்டிய கோபுரங்கள் காட்டு கின்றன ; அவன் உண்ணும் அறுசுவை உண்டி புலப் படுத்துகிறது ; அவன் பூணும் அணிவகை தெளிவாக்கு கிறது ; எல்லாவற்றிற்கும் மேலாக, அவன் பேசும் பாஷையில் உள்ள சேம நிதிகளாகிய இலக்கியங்கள் காட்டுகின்றன.

மனித இன ஆராய்ச்சியாளரில் சிலர், 'ஆதி மனி தன் தமிழ் நாட்டிலே தோன்றினுன் என்று' கூறுகின் றனர். ' தமிழனுடைய அங்க அமைப்பு இன்று நேற்று உண்டானதல்ல; பல காலமாக, பல ஆயிரம் வருஷங் களாக அவன் தலையும் மூக்கும், வாயும் முகமும் பண்

பட்டுப் பண்பட்டு இன்றை நிலையை அடைந்திருக்கின்றன' என்பது அவர் கூறும் செய்தி. உருவம் காலங்கண்ட பழமையைக் காட்டுவது உண்மையாக இருந்தால், அவன் மொழியும் அவனோடு நெடுங்காலங் கண்ட பழமையுடைய தென்றே சொல்லவேண்டும்.

இன்று உலகத்தில் உள்ள பாஷைகளுக்குள்ளே மிகப்பழமையான மொழிகளில் தமிழ் ஒன்று என்பதை மொழி நூல் வல்லவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள்.

தமிழர் தமக்குள்ளே வழங்கும் கதைகளிலிருந்து இந்தப் பழமையை ஒருவாறு ஊகிக்க முடியும். சிவபிரான் தமிழை உண்டாக்கினார் என்று புராணம் சொல்கிறது. அதனூடே உள்ள உண்மையை நாம் உணரவேண்டும். சரித்திரத்தால் தொடப்படாத காலத்திலேயே, சிருஷ்டியோடு சேர்ந்து படைக்கப் பட்டதென்று தோன்றும்படியான பழமையுடையது தமிழ் என்பதைத்தான் இந்தக் கதை சொல்வதாகக் கொள்ளவேண்டும். சைவர் சிவன் தந்ததாகச் சொன்னால், பௌத்தர் அவலோகிதன் தந்ததாகக் கூறுவர். எல்லோரும், தெய்வத்தால், மனித சிருஷ்டிக்கு மூல காரணமான தெய்வத்தால், அமைக்கப்பட்டது இது என்றே சொல்கிறார்கள். அந்தக் கதை தமிழின் தெய்வத்தன்மையைக் குறிப்பதாகக் கொள்வதை விட, அதன் பழமையைக் குறிப்பதாகக் கொள்வதே பொருத்தமாகும்.

# 2
# சங்கத் தமிழ்

உலகத்திலுள்ள பாஷைகளை எல்லாம் சிறப்பிக்கும் பொழுது அந்தப் பாஷைகளின் இனிமையையோ அழகையோ வெளிப்படுத்தும் விசேஷங்களோடு சேர்த்துச் சொல்லுவார்கள். ஆனால் தமிழுக்கு மாத்திரம் ஒரு தனியான சிறப்புண்டு. தமிழைப் பற்றிப் பெரியவர்கள் சொல்லும்பொழுதெல்லாம் 'சங்கத் தமிழ்' என்றே வழங்கி வருகின்றார்கள். ஔவைப் பாட்டி விநாயகக் கடவுளிடம் வரம் வேண்டுகையில் நான்கு பொருளை நிவேதனம் செய்து மூன்று தமிழை வேண்டுகிறாள். 'பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை, நாலும் கலந்து உனக்கு நான் தருவேன்' என்று தொடங்கிக் கணபதிக்கு ஆசை காட்டிவிட்டு, 'கோலஞ்செய் துங்கக் கரிமுகத்துத் தூமணியே, நீ எனக்குச் சங்கத் தமிழ் மூன்றும் தா' என்று பிரார்த்திக்கிறாள். இங்கே, இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழையும் சங்கத் தமிழ் என்று சொல்லுகிறாள். இவ்வாறே 'சங்கமலி செந்தமிழ்கள்' என்று திவ்யப் பிரபந்தத்தில் வருகின்றது. இவற்றால் சங்கத்திலே தமிழ் வளர்ந்து பெற்ற பெருமை இணையற்றது என்ற செய்தி தெரியவரும்.

தமிழ் நாடு மிக விரிந்தது. இந்நாட்டில் அறிவுடையோர் பலர் இருந்தார்கள். அவர்களுள்ளும் நூலியற்றும் வன்மை வாய்ந்த புலவர்கள் கணக்கில்

லாமல் இருந்தார்கள். நினைத்தவர்களெல்லாம் நினைத் தபடி கவி பாடி நூல்களாக வெளியிடத் தொடங்கி ஞல் தமிழ் நாட்டில் நூல் குப்பை மலிந்துவிடும். 'அவ் வளவு நூல்களையும் தமிழர்கள் படிக்க வேண்டியது அவசியமா?' என்ற கேள்வி வேறு எழும். "ஆராய்ந்து அமைவுடைய கற்பவே" என்று நாலடியார் சொல்லு கிறது. கணக்கில்லாத நூல்களைப் பார்த்து, தமக்கு வேண்டியவை இவை என்று ஆராய்ந்து, தமக்குப் பொருத்தமானவற்றைக் கற்பதுதான் வாழ்க்கைக்கு உபயோகப்படும் கல்வி என்று அப்புலவர் கூறுகிருர்.

அமைவுடைய நூல்களை ஆராய்வது எப்படி? அதற்கு ஒரு குறிப்பிட்ட அறிவுத் திறமை வேண் டாமா? இக்காலத்தில் யுனிவர்சிடிகளில் பாட புத்த கங்களைத் தேர்ந்தெடுப்பதற்குத் தனிச் சபையார்கள் உண்டு. பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணுக்கர்களுக் குச் சில நிபந்தனைகளுக்கு உட்பட்ட புத்தகங்களே பாடமாக வருகின்றன. அந்தப் பாட புத்தகங்கள் பெரும்பாலும் வெளி யுலகத்தாருக்குப் பயன்படா மலே போகின்றன.

பண்டைத் தமிழ் நாடு முழுவதும் ஒரு பள்ளிக் கூடம்; விடுதலைபெற்ற பள்ளிக்கூடம்; சுதந்தரக் காற்றை நுகர்ந்த கலாசாலை. தமிழனுடைய நாகரிகம் கல்வியென்னும் அஸ்திவாரத்தின் மீது எழுந்தது. கோசல நாட்டை வருணிக்கும் கம்பன், 'ஏகம் முதல் கல்வி முளைத்து எழுந்து எண்ணில் கேள்வி ஆகு அம் முதல் திண்பணை போக்கி' என்று சொல்கிருன். கல்வியிலிருந்து ஆரம்பிக்கிறது ராமராஜ்ய நாகரிகம். மக்களை மக்களாகச் செய்வது கல்வியே என்ற அடிப்

படையான கொள்கையில் தமிழர் தங்கள் கலை வாழ்வை நிருமித்து வாழ்ந்தார்கள். அவர்கள் வாழ்வு முழுவதும் கலையறிவைத் தேடும் மாணுக்கர்களாக வாழ்ந்தார்கள். 'யாதானும் நாடாமால் ஊர் ஆமால் என் ஒருவன், சாந்துணையும் கல்லாதவாறு' என்று இரங்குகிருர் வள்ளுவர். இடவரையறையும் கால வரையறையும் அறிவுப் பசியுள்ளவனுக்கு இல்லையாம். எந்த நாட்டிலும் கல்வியைப் பரப்பலாம். எந்த ஊரி லும் கலைத்தொண்டு செய்யலாம். மூச்சிருக்கும் வரைக் கும் கல்வியைப் பயின்று இன்புறலாம். ஆகவே, தமிழர் கொள்கைப்படி உலகமே ஒரு பள்ளிக்கூடம். மனிதனுடைய ஆயுள் முழுவதுமே படிப்பிற்குரிய காலம்.

இப்படி அமைந்த வாழ்க்கையில் கணக்கில்லாத நூல்கள் குவிந்தால் தமிழன் எதைப் படிப்பான்? எதை விடுவான்? பழங்காலத்துத் தமிழர்கள் இந்தச் சங்கடத்திற்குள் மாட்டிக்கொள்ளவில்லை. தமிழ் நாடாகிய பள்ளிக்கூடத்தில் இன்ன நூல்களே வழங் குவதற்கு உரியன என்ற வரையறையைச் சில பெரி யோர்கள் சேர்ந்து அமைத்தார்கள். அந்தப் பெரி யோர்கள் கூடிய கூட்டமே சங்கம் என்ற பெயரால் வழங்கப்படும். இந்தக் காலத்துப் பாட புத்தகங் களுக்கு, 'பாட புத்தக சபையாரால் அங்கீகரிக்கப்பட் டது' என்ற முத்திரையிடுவதை நாம் பார்க்கின்றோம். அந்தக் காலத்தில், தமிழ் நாட்டில் வழங்கிய எல்லா நூல்களுக்கும், அதாவது தமிழ் என்ற பெயரால் வரும் எதற்கும், அத்தகைய முத்திரை இருந்தது; சங்கத் தமிழ் என்பதுதான் அது.

புத்தகங்களைத் தக்கவை என்று நிர்ணயிக்கும் பெரியோர்கள் எப்படி இருந்தார்கள்? கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம் இவற்றில் சிறந்தவர்கள் அவர்கள். நல்லிசைச் சான்றோர் என்று அவர்களை வழங்கினார்கள். பிரிவின்றிப் புலவர்கள் ஒன்று சேர்ந்த ஒற்றுமையால் பல அருமையான காரியங்களெல்லாம் நிகழ்ந்தன. தனிப் புலவன் ஒருவனுக்கே மற்ற மனிதர்களைக் காட்டிலும் உயர்ந்த பெருமை இருக்கும்பொழுது, பல புலவர்கள் சேர்ந்த ஒரு கூட்டத்திற்கு எவ்வளவு பெருமை இருக்க வேண்டும்!

பழைய தமிழ் நூல் ஒன்றில் ஒரு புலவர் மதுரையை வருணிக்கின்றார். மாடங்கள் நிறைந்த அந்த மதுரைக்குப் புகழ் நிறைந்த சிறப்புண்டாம். பாண்டியனுடைய ஆணைக்கு அடங்கி மாந்தர் வாழும் இயல்பினால் வந்த சிறப்பல்ல அது. வேறொரு கூட்டத்தார் செலுத்துகின்ற ஆணையால் அந்தச் சிறப்பு உண்டாகிறதாம். அந்த ஆணை இன்று நேற்று வந்ததல்ல. பல காலமாக வழிவழியே வந்த தொல்லாணையாகும். அந்த ஆணையைச் செலுத்துகின்ற பெரியார் நல்ல ஆசிரியர்கள். அவர்கள் பலர் ஒன்று சேர்ந்து தமிழை ஆராய்ந்து இன்புற்றார்கள். இந்தப் புகழ் சான்ற சிறப்பு மதுரைக்குத் தனி உரிமை.

> ‘தொல்லாணை நல்லாசிரியர்
> புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்’

என்று அழகாக அந்தப் புலவர் வருணிக்கின்றார். அத்தகைய புலவர்கள் கூடிய சங்கங்களில் புடம் பெற்ற பொன்னாக வெளிப்பட்டதுதான் சங்கத் தமிழ்.

# 3

# சங்கப் புலவர்

தொல்லாணை நல்லாசிரியர் என்ற புகழைப் பெற்ற புலவர்களை நல்லிசைச் சான்றோர் என்றும் சொல்வார்கள். இந்தக் காலத்தில் கலாசாரம் என்றும் பண்பாடு என்றும் மொழிபெயர்த்துச் சொல்லுகின்ற கல்சர் (Culture) என்ற பண்பைச் சான்றாண்மை என்ற சொல்லால் பழங்காலத்தில் வழங்கினார்கள் என்று தெரிய வருகிறது. அன்பு, தீய செயல்களில் நாணம், சமரச பாவம், கருணை, உண்மை யுணர்ச்சி ஆகிய இந்த ஐந்தும் சேர்ந்த ஒரு கூட்டுப் பண்பையே 'சான்றாண்மை' என்று அக்காலத்தில் சொன்னார்கள். மேல்நாட்டார் கல்சர் (Culture) என்று சொல்கின்ற பண்பெல்லாம் இதற்குள் அடங்காவோ? சங்கப் புலவர்கள் என்ற சான்றோர் கூட்டம் ஆங்கிலத்தில், 'தி கல்சர்டு' (The Cultured) என்று சொல்கிறார்களே அந்தப் பெரியார் கூட்டமாகவே இருந்தது. அவர்கள் தம்முடைய அறிவுச் செங்கோல் கொண்டு தமிழ்நாடு முழுவதையும் ஆண்டார்கள். அரசர்களும் சங்கப் புலவர்கள் ஆணைக்கு அடங்கி ஒழுகினார்கள்.

பண்டிதரென்றும் புலவரென்றும் பெயர் வைத்துக்கொண் டிருக்கும் இக்கால மனிதர்களுக்குள் பகைமையும் பொறாமையும் தாண்டவமாடுவதைப் பார்க்கிறோம். ஆனால் பண்டைக் காலத்துச் சங்கப் புலவர்கள்

மிக நெருங்கிப் பழகினார்கள். சிறிதேனும் குற்றமற்ற கல்வி கேள்வியை உடையவர்களாகி, தம்முள் விரோதமில்லாது ஒன்றுகூடி வாழும் வாழ்க்கை சொர்க்க போகத்தைவிட இனிமையுடையது என்று ஒரு புலவர் சொல்கிறார். 'சொர்க்கபோகம் இதைவிட இனியது என்று யாரேனும் சொன்னால் அங்கே போய்ப் பார்த்து விட்டு வருவேன்' என்று வீறுடன் முழங்குகிறார் அப் புலவர். 'இகல் இலராகி' ஒன்று கூடிய புலவர்கள் அடைந்த ஆனந்தம் அளவற்றது. அந்தப் புலவர் கூட்டத்தால் தமிழர்கள் அடைந்த பயனோ மிகப் பெரிது. புலவர்கள் அடைந்த இன்பம் அவர்கள் காலத்தோடு போயிற்று. அவர்களால் நாம் அடைந்த பயனோ இன்றளவும் நின்று நிலவுகிறது; இனியும் நிற்கும்.

பகையென்பது மருந்துக்கும் இல்லாது, சிறந்த அன்பினால் ஒன்றுபட்டு, புலவர்கள் வாழ்ந்தார்கள். மன்னர்களையும் நண்பர்களாகப் பெற்றார்கள். கபிலர் என்ற ஒரு புலவர் பாரி என்னும் அரசனுக்குச் சிறந்த உயிர்த் தோழராக வாழ்ந்திருந்தார். கோப்பெருஞ் சோழன் என்னும் அரசனிடம், பாண்டி நாட்டில் வாழ்ந்த பிசிராந்தையார் என்ற புலவர் உயிரோடு ஒன்றிய நட்பைக் கொண்டிருந்தார். சோழன் இறந்து படவே புலவரும் உயிர் நீத்தார். இப்படி நட்பிற்கு உறைவிடமாக இருந்த புலவர்களுடைய நெஞ்சம் அன்பு பொங்கும் ஊற்றாக இருந்தது. அவர்கள் தமக்குள் ஒற்றுமையாக வாழ்ந்ததோடு அல்லாமல், ஒருவர்க்கொருவர் பகைத்துக்கொண்ட மன்னர்களிடையேயும் சமாதானத்தை உண்டுபண்ணினார்கள்.

அறிவினாலும் அன்பினாலும் தமிழ் மன்னர்களையும் குடிகளையும் தம்முடைய சொல்லுக்கு அடிமைப் படுத்திப் புலமைச் செங்கோல் செலுத்திய அவர் களைத் தமிழர்கள் தெய்வமாகவே எண்ணி வழிபட்டு வந்தனர்.

தெய்வப் பாவலர் என்று சங்கப் புலவர்களை அழைத்து வந்தார்கள். சிவபெருமானே அந்தப் புலவர் களுக்குள் ஒருவராக வீற்றிருந்தார். அது மாத்திரமல்ல; புலவர்கள் தம்முடைய ஆணையைச் செலுத்திய சங்கத்தில் சிவபெருமானும் அவர்கள் ஆணைக்கு அடங்கி நின்றாராம். ஒரு புலவர் இந்தச் செய்தியை ஒரு பாட்டில் மிக அழகாகச் சொல்கிறார்.

'பாரத தேசத்தில், சிறந்த மகாமுனிவராகிய அகத்தியர் விரும்பிவந்த தென்னாட்டிற்கு ஒரு நமஸ் காரம்' என்று அவர் ஆரம்பிக்கிறார். 'அந்தத் தென் னாட்டிலும் பாண்டி நாட்டிற்குத் தனியாக ஒரு நமஸ் காரம்' என்று முடிக்கிறார். எதற்காக?

பாட்டுப் பாடியவர் ஒரு சைவர். சிவபெருமான் மூன்று மூர்த்திகளுக்கும் மேலானவர் என்பது அவர் கொள்கை. திரிமூர்த்திகளும் தேடித்தேடி அலுத்துப் போய் ஏங்கிக் காண்பதற்கு முடியாமல் இருப்பவர் சிவ பெருமான். அந்தச் சிவபெருமான் மதுரையில் சங்கத் திற்கு முன்னாலே நின்று வாதாடினாராம். தம்முடைய பக்தனாகிய தருமி என்பவனுக்கு அவர் ஒரு பாட்டை எழுதிக் கொடுத்தார். அந்தப் பாட்டை அரசனுக்குக் காட்டி அவன் பரிசு பெற்றான். சங்கப் புலவர்களில் ஒருவராகிய நக்கீரர், பாட்டில் ஏதோ குற்றம்

இருக்கிறது என்று சொன்னார். பாட்டை இரவலாகப் பெற்றுவந்த தருமிக்கு நடுக்கம் கண்டுவிட்டது. 'ஐயோ உம்முடைய பாட்டுக்கே குற்றம் சொல்லுகிறீர்களே!' என்று அலறிப் புடைத்துக் கொண்டுபோய்ச் சிவபெருமானிடம் முறையிட்டான். அந்தப் பாட்டு, குற்றமில்லாததுதான் என்பதை நிலை நிறுத்த மதுரையிலிருக்கும் சிவபெருமான் சங்கத்திற்கு முன்பாகப் புலவராகப் போய் வாதம் செய்து வென்றாராம். இந்தக் கதை திருவிளையாடற் புராணத்தில் இருக்கிறது.

அவர் சங்கத்திற்கு முன்பு வந்து வாதம் செய்யும் பொழுது கோர்ட்டாருக்கு முன்பு கூண்டில் நிற்கும் கைதிபோல் நின்றுகொண் டிருந்தாராம். சங்கப் புலவர்களெல்லாம் கம்பீரமாக வீற்றிருந்தார்களாம். திரிமூர்த்திகளுக்கும் அரியவராகிய சிவபெருமான் நிற்கவும், புலவர்கள் எல்லாம் வீற்றிருக்கும்படி செய்தது எது? தமிழ்தான். வெறும் தமிழல்ல; சங்கத் தமிழ். தமிழின் சிறப்பும், புலவர்களுடைய ஒற்றுமையும் புலமையைச் சீர்தூக்கும் ஓர் இடத்தில் தெய்வத்தையும் வணங்கும்படி செய்துவிட்டன. 'புலவர்களை உட்கார வைத்துச் சிவபெருமானை நிற்க வைத்த தமிழின் ஆணை நிலவிய நாடாகையால், பாண்டி நாட்டிற்குத் தனியே என் வணக்கம் உரியதாகுக' என்று புலவர் சொல்கிறார்.

**'ஆவியந் தென்றல் வெற்பின்**
**அகத்தியன் விரும்பும் தென்பால்**
**நாவலந் தீவம் போற்றி**
**நாவலந் தீவந் தன்னுள்**

**மூவர்க்கு அரியான் நிற்ப**
**முத்தமிழ்த் தெய்வச் சங்கப்**
**பாவலர் வீற்றி ருக்கும்**
**பாண்டிநன் ஞடு போற்றி.**

*[ஆவியம் தென்றல் - உயிரையும் உதவுகின்ற தென்றற் காற்று. நாவலந்தீவு - பாரத நாடு.]*

*ஆகவே சங்கத் தமிழ் என்பது தமிழின் உயர்வையும், தமிழ்ப் புலவர்களுடைய ஒழுக்கச் சிறப்பையும், அவர்களுக்குள்ளே இருந்த ஒற்றுமையையும், அவர்களது கூட்டு முயற்சியினுல் விளைந்த நன்மைகளையும் குறிப்பதற்கு அடையாளத் தொடராக விளங்குகின்றது.*

*சங்கப் புலவர்கள் அறிவாணை செலுத்தினுர்கள் என்ருல் அது சுலபமான காரியம் அன்று. வெறும் கல்வியினுல் மாத்திரம் அந்த நிலை வந்துவிடாது. அகத்தியர், தொல்காப்பியர் முதலிய புலவர்கள் எல்லாம் புலன்களை அடக்கித் தவம் புரிந்த ஞானிகள். கபிலர் என்ற புலவர், 'புலன் அழுக்கற்ற அந்தணாளர்.' பிற்காலத்தில் திருநெறித் தமிழையும் திவ்யத் தமிழையும் பரப்பியவர்கள் நாயன்மார்களும் ஆழ்வார்களும் ஆவார்கள். அவர்கள் அருட் புலவர்கள்; தெய்வத் திருவருளாலே தமிழை வளர்த்தவர்கள்.*

*இப்படி ஒழுக்கமும் புலமையும், பருந்தும் நிழலும் போல் ஒன்றுபட்டுத் திகழ்ந்த வாழ்க்கையையுடைய புலவர்களைத் தமிழர் அனைவரும் வழிபட்டு அவர்கள் வாய்மொழியை வேதமாகக் கொண்டு படித்து இன்புற்ருர்கள் என்பது என்ன ஆச்சரியம்?*

# 4

# தலைச் சங்கம்

"மன்னும் இமய மலை எங்கள் மலையே" என்று நாம் பாரதியாருடைய பாட்டை முழக்கிக்கொண்டே பாரத சமுதாயத்தை வாழ்த்துகிறோம். அந்தப் பெரிய இமயமலையானது ஒரு காலத்தில் இல்லாமலே இருந்தது என்று 'நில இயல்பு நூல்' வல்லார் தெரிவிக்கிறார்கள். பூமிதேவியின் திருமேனி அவ்வப் பொழுது மாறிக்கொண்டே இருக்கின்.றதாம். பல் லாயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு ஒரு முறை இத்தகைய மாறுபாடுகள் நிகழ்கின்றன. கடல் இருந்தவிடத்து மலையும் மலை இருந்தவிடத்துக் கடலும் தோன்றுகின்றன. இமயமலை உள்ள இடத் தில் முன்பு கடல் இருந்தது என்று ஆராய்ச்சியாளர் சொன்னால் நாம் வியப்படைகிறோம்.

தமிழ் நூல்களால் இத்தகைய நிலப் புரட்சிகளைப் பற்றித் தெரிந்துகொள்ள முடிகிறது. கன்னியாகுமரி என்ற கடல் துறையை நாம் தமிழ் நாட்டின் தெற் கெல்லையாக வைத்துக்கொண் டிருக்கிறோம், அதற் கும் தெற்கே பல மலைகளும் ஆறுகளும் கொண்ட நிலப்பரப்பு முன் காலத்தில் இருந்ததாம், தென்னுப் பிரிக்காவையும் இந்தியாவையும் இணைத்துக்கொண்டு ஒரு பரந்த நிலப்பரப்பு இருந்ததாகச் சொல்லி அதனை லெமூரியாக் கண்டம் என்று சில ஆராய்ச்சியாளர்

குறிக்கின்றனர். அது எப்படியானுலும், தமிழ் நூல்களின் சாட்சியைக் கொண்டே, தமிழன் தனக்குரிய நாட்டின் ஒரு பகுதியை வருண பகவானுக்கு நிவேதனம் செய்துவிட்டான் என்பதை அறியலாம், இப்பொழுது கன்னியாகுமரி இருக்குமிடத்திற்குத் தெற்கே குமரியாறு, குமரிமலை, பஃறுளியாறு என்பவற்றைக் கொண்ட பல நிலப் பகுதிகள் இருந்தனவாம். சிலப்பதிகாரத்தில் உள்ள, ' பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக் குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள ' என்ற பகுதியினுல் இது தெரியவருகிறது. பன்மலை அடுக்கம் என்பதனுல் பல மலைகள் அந்தப் பரப்பில் இருந்தன என்று அறிகிறோம்.

சிலப்பதிகாரத்தில் உள்ள அப்பகுதி பாண்டியனைப் பற்றிச் சொல்வது. பாண்டியருக்குள் மிகப் பழங்காலத்தில் '**கடல்வடிம்பலம்ப நின்ற பாண்டியன்**' என்று ஒருவன் இருந்தான். அவன் சமுத்திரத்தை வேல் கொண்டு எறிந்ததாகவும் அதனுல் கடல் அவன் அடிபணிந்ததாகவும், அதுபற்றி அவனுக்கு அப்பெயர் வந்ததாகவும் கூறுவர். புராணக் கதையாகவுள்ள இச் செய்தியால் ஓர் உண்மையை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். பரந்த நிலப் பரப்பைத் தனக்குரியதாக்கி ஆண்டுகொண்டிருந்த பாண்டியன், கடற் பரப்பையும் தன்னுடைய ஆணைக்குள் வைக்கவேண்டும் என்று நினைத்தான். கலங்களைச் செலுத்திக் கடலின் ஒரு பகுதியை அளவிட்டுத் தனக்குரிமையாக்கிக் கொண்டான். அவன் தன்னுடைய ஆணையினுல் அளந்ததை உபசாரமாகத் தன் அடியால் அளந்தான் என்று புலவர்கள் சொன்னுர்கள். அரசனது தாள்

நிழலின்கீழ்க் குடிமக்கள் அடங்கி நிற்பர் என்னும் சம்பிரதாய வார்த்தைகளைப் பின்பற்றிப் புலவர்கள் அவ்வாறு பாராட்டினார்கள். அதுகாறும் அளவு தெரியாத கடலின் அளவைத் தன்னுடைய ஆணையினால்—அடியினால்—அளந்து—அறிந்து, எல்லா அரசர்களும் இதுவும் அளவிற்குள்பட்டது என்று உணரும்படி அவ்வரசன் செய்தானாம். இதனை, 'அடியில் தன்னளவு அரசர்க்கு உணர்த்தி, வடிவேல் எறிந்த' பராக்கிரமமாகச் சிலப்பதிகாரம் சொல்லுகிறது.

இப்படி ஒரு காலத்தில் தன்னை அளந்துகாட்டிய பழியைப் போக்கிக்கொள்ளக் கடல் நினைத்ததாம். பின் ஒரு காலத்தில் பாண்டிய நாட்டின் தென்பகுதியை அது விழுங்கிப் பழிக்குப் பழி வாங்கியதாம்,

> 'வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
> பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
> குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள'

என்று புலவர் சமத்காரமாகச் சொல்லுகிறார். கடல் கொண்ட பிரதேசத்தில் பஃறுளி என்ற ஆறும், குமரி மலையென்னும் மலையும் மிகத் தலைமை பெற்று இருந்தன. பிற்காலத்துப் பாண்டியரில் ஒருவன் இந்த நஷ்டத்தைப் போக்குவதற்காக வடநாட்டுக்குப் படையெடுத்துச் சென்று கங்கையையும் இமாசலத்தையும் தன்னுடையனவாக ஆக்கிக் கொண்டானாம்.

தமிழ் வளர்த்தவர்கள் பாண்டியர்கள். பாண்டியர்களுக்கு எங்கெங்கே அரசிருக்கை நகரங்கள் அமைந்தனவோ அங்கங்கே தமிழரசிக்கும் செங்கோல் செலுத்தும் ஆஸ்தானம் அமைந்தது. பாண்டியர்கள்

கடல்கொண்ட பிரதேசத்திலிருந்து ஆண்டு வந்தார் களாம். மிகப் பழங்காலத்தில் அந்தத் தென்னாட்டில் மதுரை என்று ஒரு நகரம் இருந்தது. அதில் வாழ்ந் திருந்த பாண்டியர்கள் தமிழ்ப் புலவர்களை எல்லாம் ஆதரித்து அவர்களைக் கூட்டிச் சங்கத்தை நிறுவினார் கள். அதற்குத் தலைச்சங்கம் என்று பெயர். எண்பத் தொன்பது பாண்டிய அரசர்கள் ஒருவர்பின் ஒருவராக அந்தச் சங்கத்தைக் காப்பாற்றி வந்தார்களாம். சங்கத் தில் நிரந்தர அங்கத்தினர்களாகப் பல புலவர்கள் இருப்பார்கள். தமிழ் நாட்டின் பலவேறு இடங்களி லுள்ள பல கலைப் புலவர்கள் பாடல்களை இயற்றிவந்து அந்தச் சங்கத்தில் அரங்கேற்றுவார்கள். அரங்கேற்றப் பட்ட கவிதைகளை யெல்லாம் தமிழ் நாட்டார் அநுப வித்து இன்புறுவார்கள். புலவர் கூட்டத்தை யாதொரு குறைவும் இன்றிப் பாதுகாத்துவந்த பாண்டியர்களுக் குள் சிலர் தாமே சிறந்த புலவர்களாகவும் இருந்தார்கள்.

சங்கத்தில் வீற்றிருந்த புலவர்களோடு சிவபெரு மான் முதலிய கடவுளர்களும் சேர்ந்து சங்கப் புலவர் களாக விளங்கினார்களென்று கதை சொல்லுகிறது. மரியாதைக்காகவோ, உண்மையில் அக்காலத்தில் இருந்த தெய்வத்திறனாலோ அவர்களுக்குச் சில இடங் கள் இருந்தன என்று தெரிகிறது.

அகத்தியர் தலைச்சங்கத்தில் இருந்த புலவர்களுள் தலை சிறந்தவர். அவர் இயற்றிய அகத்தியம் என்ற இலக்கணமே அந்தக் காலத்துத் தமிழ் மொழிக்குரிய சட்டம். சிவபெருமானும் முருகக் கடவுளும் குபேரனும் சங்கப் புலவர்களாக இருந்தார்களென்று பழங்கதை சொல்லுகிறது. இப்படி ஐந்நூற்று நாற்பத்தொன்பது

பேர்கள் சங்கத்தின் அங்கத்தினர்கள். அவர்களும் பிற புலவர்களும் பல பாடல்களைப் பாடினார்கள். மொத்தத்தில் 4449 புலவர்களுடைய பாடல்கள் தலைச் சங்கத்தில் அரங்கேற்றப்பட்டன. பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை என்ற விநோதமான பெயர்களையுடைய பல பாடல்களை அவர்கள் இயற்றினார்களாம். பாண்டியர்களுக்குள் ஏழு பேர் நூலியற்றித் தலைச் சங்கத்தில் அரங்கேற்றினார்கள்.

தலைச்சங்கம் இருந்த மதுரை தென் மதுரை என்றும், இப்பொழுது தமிழ் நாட்டிலுள்ள மதுரை வட மதுரை என்றும் அந்தக் காலத்தில் வழங்கப்பட்டன. 'முரஞ்சியூர் முடிநாகராயர்' என்ற புலவர் ஒருவர் அந்தத் தலைச் சங்கத்துப் புலவராக இருந்தார். அவருடைய பாட்டு ஒன்று மாத்திரம் இப்பொழுது நமக்குக் கிடைக்கிறது. மற்றப்படி, தலைச்சங்கத்தைப் பற்றிய செய்திகளெல்லாம் வெறுங் கதையாக, எந்த விதமான சாட்சிகளும் இல்லாமல் பல நூற்றாண்டுகளாக வழங்கி வருகின்றன.

5

# அகத்தியர்

இமாசலததில் பார்வதி கல்யாணம் நடைபெற்றது. தேவர்களும் முனிவர்களும் அந்தக் கல்யாண விமரிசையைக் கண்டு களிக்கும்பொருட்டுக் கூடினர். கணக்கில் அடங்காத அத்தனை கூட்டத்தையும் இமாசலம் தாங்குமோ என்ற சந்தேகம் வந்துவிட்டது. இந்தக் கூட்டத்தினல் வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்துவிடுமென்ற பயத்தால் தேவர்கள் நடுங்கினராம். அப்பொழுது சிவபெருமான் யோசனை செய்து பார்த்தார். கல்யாணத்துக்கு வந்த கூட்டத்தைக் கலைத்துவிடலாமா? இவ்வளவு பாரத்துக்கும் சமமான பாரத்தைத் தென்னுட்டிலே வைத்துவிட்டால் பூமி சமமாகிவிடும் என்று எண்ணினர். இமாசலத்தைப் போல மற்றொரு மலையை உண்டாக்கித் தென்னுட்டில் வைத்துவிடுவதா? வேறு என்ன செய்வது?

கடவுள் ஒரு காரியம் செய்தால் மனிதர்கள் செய்வது மாதிரியா இருக்கும்? சிவபெருமான் முனிவர் கூட்டத்தில் இருந்த அகத்தியரை அழைத்தார். அகத்தியர் உருவத்தில் மிகவும் குறுகியவர்; அதனுல் குறுமுனி என்று அவருக்கு ஒரு பெயர் உண்டு. 'பூமியின் நிலை சமமாவதற்கு நீ போய்த் தென்னுட்டில் இருக்க வேண்டும்' என்று அம்முனிவரை நோக்கிக் கடவுள் கட்டளையிட்டார். தேவர்களுக்கு ஒன்றும் விளங்க

வில்லை, 'பூமி தட்டழிந்து வடதிசை உயர்வதற்கு அகத்தியர் என்ன செய்ய முடியும்?' என்று மயங்கினர். அந்தக் குறுமுனிவர், உருவத்தால் குறுகியவராக இருப்பினும் தவத்தால் இமாசலத்தையும் விடப் பெரியவர் என்பதைத் தேவர்கள் உணரவில்லை.

சிவபிரான் கட்டளையைக் கேட்ட அகத்தியர், "திருமண வைபவத்தைப் பார்க்கும் பேறு எனக்கு இல்லைபோலும்!" என்று சிறிது வருந்திய பொழுது, "தெற்கே தமிழ் நாட்டில் நீ சென்று தங்குவாயாக, அங்கே திருமணக் கோலத்தைக் காட்டுவோம்" என்று அருளிச் செய்தார்.

"நான் போகும் இடம் தமிழ் நாடாயிற்றே. தமிழ் மொழியில் எனக்கு வன்மை இல்லையே! ஒரு நாட்டிற்குச் சென்று அந்த நாட்டு மொழி தெரியாமல் வாழ்வது எவ்வாறு?" என்று அகத்தியர் கேட்டார்.

உடனே சிவபெருமான் அம்முனிவருக்குத் தமிழை உபதேசித்தார். தவத்தால் மெய்யறிவு பெற்ற முனிவர் தமிழை நன்கு தெரிந்துகொண்டு தென்னாட்டுக்கு வந்து சேர்ந்தார். தாமிரபரணி தீரத்தில் சந்தனப் பொழிலும் தென்றலும் நிலவும் பொதிய மலைக்குச் சென்று அதனைத் தம் இருப்பிடமாகக் கொண்டார். அவர் அங்கே சென்று இருந்தமையால் பூமியின் பாரம் சமமாகி விட்டதாம். பொதியில் மலை அடிவாரத்தில் உள்ள பாபநாசம் என்னும் தலத்தில் சிவபெருமான் தம் கல்யாணத் திருக்கோலத்தைக் காட்ட அகத்தியர் தரிசித்து இன்புற்றாரென்று புராணம் கூறுகிறது.

அகத்தியர் தென்னாட்டுக்கு வரும்பொழுதே பல அரிய செயல்களைச் செய்துகொண்டே வந்தார். தாம் போகும் இடத்தில் காடுகள் அதிகமாக இருப்பதனால் அங்கே ஜனங்கள் வாசம் செய்ய வேண்டுமென்ற ஆசையால் பதினெட்டுக் குடும்பங்கள் அடங்கிய வேளாளர்களைக் கொண்டு வந்தார். வருகையில் வழிமறித்து நின்ற விந்தத்தை அடக்கினார். காவிரி யாற்றைக் கொண்டுவந்து சோழநாட்டுக்கு உதவினார். சில முனி புத்திரர்களைத் தமக்கு மாணாக்கராக அழைத்து வந்தார்.

இப்படி எழுந்தருளிய அகத்திய முனிவர் பொதிய மலையை இருப்பிடமாகக் கொண்டு தங்கியது முதல் தமிழ் முனிவர் ஆகிவிட்டார். அக்காலத்தில் இராவண னது அதிகாரத்துக்குட்பட்ட அரக்கர்கள் பலர் தென் னாட்டில் இருந்துவந்தனர். அவர்களால் முனிவர் களுக்கு மிக்க துன்பம் உண்டாயிற்று. அகத்திய முனிவர் அவ்வரக்கர்களை ஒழித்துவிட வேண்டுமென்று எண்ணினார். அவர்களுக்கெல்லாம் தலைவனாகிய இராவணனை இசைப்போருக்கு அழைத்தார். இருவரும் வீணை வாசித்துப் போட்டியிட்டனர். போரில் இராவ ணன் தோற்றான். முன்பு செய்துகொண்ட நிபந்தனை யின்படி இராவணன் தன் தமர்களுடன் இலங்கையே குடியாகச் சென்று விட்டான்.

அகத்தியர் ஒருவாறு ஆறுதல் பெற்றுப் பொதிய மலையில் வாழ்ந்து வரலானார். அவர்பால் தமிழ் கற்கப் பல மாணாக்கர்கள் வந்து கூடினர். அவர்களுள் பன் னிரண்டு பேர்கள் முக்கியமானவர்கள். இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழையும் அவர்கள்

ஆராய்ச்சி செய்து பாடம் கேட்டார்கள். நாளடை வில் தென்னாடு முழுவதும், அகத்தியர் பல மாணாக்கர் களுக்குப் பாடஞ் சொல்லிவரும் செய்தி பரவியது.

அகத்தியர் தமிழுக்கு ஓர் இலக்கணம் இயற்றினார். அதை அகத்தியம் என்று சொல்வார்கள். அந்த இலக்கண நூல் தமிழ்நாடு முழுவதும் பரவிப் புகழ் பெற்றது. அதுகாறும் மூன்று தமிழுக்கும் வரையறை யாக ஓர் இலக்கண நூல் இருக்கவில்லை போலும்! இயல், இசை, நாடகம் என்னும் மூன்று வகைத் தமிழுக்கும் உரிய விரிவான இலக்கணமாக அமைந்தது அகத்தியம் என்னும் நூல்.

பொதியமலை, பல புலவர்கள் தங்கித் தமிழ் ஆரா யும் இடமாகி விட்டது. இதனை அறிந்த பாண்டிய அரசன் அகத்திய முனிவரை வந்து தரிசித்தான். அக் காலத்தில் கன்னியா குமரிக்கும் தெற்கே இருந்த மதுரையில் அவன் இருந்து ஆண்டுவந்தான். அகத் திய முனிவருடைய உதவியால் தன்னுடைய தலைநக ரத்தில் ஒரு சங்கத்தை நிறுவ வேண்டுமென்று அவாவிய பாண்டியன் தன் கருத்தை முனிவரிடம் தெரிவித்துக்கொண்டான். அவருடைய ஆசியுடன் தமிழ்ச் சங்கம் ஆரம்பமாயிற்று. அதுதான் தலைச்சங் கம். அச்சங்கத்தில் அகத்தியர் இயற்றிய அகத்தி யமே இலக்கணமாகக் கொள்ளப்பட்டது.

பல ஆண்டுகள் கடந்தன. தலைச்சங்கம் இருந்த மதுரையைக் கடல் கொண்டது. அப்பொழுது பாண் டியர்கள் தங்கள் தலை நகரத்தை வடக்கே தள்ளி வைத்துக்கொண்டார்கள். அதுவும் கன்னியா கும ரிக்குத் தெற்கே இருந்ததுதான். அதற்குக் கபாட

புரம் என்று பெயர். பாண்டியர்கள் தமிழ்ச்சுவையை நன்ருக உணர்ந்தவர்கள். அவர்கள் எங்கே சென்ருலும் தமிழை வளர்க்க வேண்டுமென்ற ஆர்வத்தை உடையவர்கள். எனவே கபாடபுரத்திற்கு வந்த பிறகு மீட்டும் அங்கே ஒரு சங்கத்தை ஆரம்பித்தார்கள். அதற்கும் அகத்திய முனிவருடைய ஆசிமொழி கிடைத்தது. அந்தச் சங்கத்தை இடைச்சங்கம் என்று சொல்வார்கள்.

அகத்தியரும், அவருடைய மாணுக்கராகிய தொல்காப்பியர் முதலியவர்களும், வேறு பல புலவர்களுமாக 59 பேர்கள் இடைச்சங்கப் புலவர்கள். 3700 புலவர்களுடைய கவிதைகள் அந்தச் சங்கத்தில் ஆராயப்பட்டன.

தலைச்சங்கத்தில் எல்லோருக்கும் சட்டமாக இருந்த இலக்கணம் அகத்தியம் ஒன்றேதான். நாளடைவில் இலக்கியம் விரிய விரிய இலக்கணமும் விரிவை அடைந்தது. அகத்தியத்தோடு தொல்காப்பியம், மாபுராணம், இசைநுணுக்கம், பூத புராணம் என்ற இலக்கண நூல்களும் இடைச்சங்கப் புலவர்களுக்கு மேற்கோள் நூல்களாக இருந்தன. இடைச் சங்கத்தை ஒருவர் பின் ஒருவராக 59 பாண்டியர்கள் பாதுகாத்து வந்தார்களாம். அவர்களுள் ஐந்து பாண்டிய மன்னர் தாங்களே நூல்களை இயற்றிஞர்கள். கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலை அகவல் என்பவற்றைப் போலப் பல நூல்களை அக்காலத்துப் புலவர்கள் இயற்றிஞர்கள். அந்த நூல்களின் பெயரைத் தவிர இப்போது ஒன்றும் கிடைக்கவில்லை. தொல்காப்பியம் ஒன்றுதான் மிஞ்சி நிற்கிறது.

இடைச்சங்கம் இருந்த கபாடபுரத்தைப்பற்றி வால்மீகியின் ராமாயணத்தில் ஒரு செய்தி வருகிறது. சுக்கிரீவன் வானரப்படைகளைச் சீதையைத் தேடும் பொருட்டு அனுப்பினான் அல்லவா? அப்பொழுது தென்னாட்டை நோக்கிச் செல்லும் கூட்டத்தைப் பார்த்து அந்நாட்டின் இயல்புகளை யெல்லாம் சொல்கிறான். இன்ன இன்ன இடத்தில் இன்ன இன்ன மலைகளையும் ஆறுகளையும் பார்ப்பீர்கள் என்று அடையாளம் சொல்கிறான். 'மணிகளாலும் முத்துக்களாலும் அழகமைந்து விளங்கும் கபாடபுரமென்ற நகரத்தைக் காண்பீர்கள்' என்று சொல்கிறான்.

இதைக்கொண்டு வால்மீகி முனிவர் காலத்தில் பாண்டியர்களுக்குக் கபாடபுரம் தலைநகராக இருந்தது என்று தெரிகிறதல்லவா?

கம்பராமாயணத்தில் இதே சந்தர்ப்பத்தில் வேறொரு விதமான செய்தி வருகிறது. சுக்கிரீவன் அநுமன் முதலியவர்களை நோக்கித் தென்றமிழ் நாட்டுப் பெருமைகளைச் சொல்கிறான். 'தென்றமிழ் நாட்டில் விசாலமான பொதிகை மலை இருக்கிறது. அதன்கண் அகத்திய முனிவராகிய தமிழ் முனிவர் எழுந்தருளி யிருக்கிறார். பல புலவர்கள் கூட்டம் புடைசூழ அவர் அங்கே விளங்குகிறார். அங்கே ஒரு தமிழ்ச்சங்கமே இருக்கிறது. நீங்கள் அங்கே சென்று உங்கள் மனத்தை இன்றமிழில் ஈடுபடுத்திவிட்டால் நீங்கள் போன காரியத்தையே மறந்து விடுவீர்கள். தமிழினிமை உங்களைத் தன் வசப்படுத்திவிடும். ஆகையால் நீங்கள் பேசாமல் அந்த மலையை வலஞ் செய்து விட்டு உங்கள் காரியத்தின்மேற் கண்ணாகச் சென்று விடுங்கள்' என்று எச்சரித்து அனுப்புகிறான்.

'தென்றமிழ்நாட்டு அகன்பொதியில்
திருமுனிவன் தமிழ்ச்சங்கம் சேர்கிற் பீரேல்
என்றும்அவண் உறைவிடமாம்;
ஆதலினால் அம்மலையை இறைஞ்சி ஏகி.'

*அகத்திய முனிவர் சிறந்த சிவ பக்தர். அவருடைய பக்தித் திறம்பற்றித் தமிழ் நாட்டில் வழங்கும் புராண வரலாறுகள் பல. திருக்குற்றாலத்தில் திருமாலைக் குறுகச்செய்து சிவலிங்கமாக்கி வழிபட்டாராம். அவர் பூசித்த தலங்கள் பல பல. அவர் தமிழை வளர்த்த கதையும் தலங்களை வழிபட்ட கதையும் உரைகள், புராணங்கள் இவற்றின் மூலமாகத் தெரிகின்றன. அவற்றைத் தக்க ஆதாரங்களாகக் கொள்ள முடியாது. அதனால் அகத்தியர் என்று ஒருவர் இந்நாட்டில் இருந்ததே இல்லை என்று சில புதிய ஆராய்ச்சியாளர்கள் சொல்லி யிருக்கிறார்கள். பல காலமாக வழங்கும் நூற் செய்திகளையும் பரம்பரை வரலாறுகளையும் அடியோடு பயனற்றன என்று ஒதுக்கித் தள்ளுவது முறையன்று. அவ்வளவுக்கும் மூலகாரணமான உண்மையொன்று இருக்கத்தான் வேண்டும். அகத்திய முனிவர் பெயரால் வழங்கும் நிகழ்ச்சிகள் அவ்வளவும் நிகழாமல் சில மாத்திரம் நிகழ்ந்திருக்கலாம். அகத்தியர் என்ற ஒருவர் இருந்தது உண்மையே. அவர் மிக்க பெருமையும் ஆற்றலும் உடையவராக இருந்தமையால் மக்கள் அவருக்குப் பின்னும் பெருமை அளிக்க வேண்டிப் பல பல கதைகளைக் கட்டிப் பரப்பி யிருக்கலாம்.*

*இவ்வளவு கதைகளுக்குள்ளும், அகத்தியர் ஒருவர் மகா பராக்கிரமசாலியாகவும் மேதாவியாகவும் இருந்தார் என்ற உண்மைதான் விளங்குகின்றது.*

# 6

# அகத்தியர் தலைமேல்

அகத்தியர் மூன்று தமிழுக்கும் இலக்கணமாக ஓர் இலக்கண நூல் இயற்றினார்; அது அவருடைய பெயரோடு சார்த்தி 'அகத்தியம்' என்று வழங்கலாயிற்று. தமிழ் நாட்டில் அந்த இலக்கண நூல் பரவிப் பெரும் புகழை அடைந்தது. தவத்தால் உயர்ந்து தமிழ் வளர்த்த அகத்திய முனிவரைத் தெய்வத்தைப்போலக் கொண்டாடினார்கள். 'சிவபெருமானுக்கு அடுத்த படியாக எண்ணக் கூடிய பெருமை யுடையவர் அகத்தியர்' என்று புலவர்கள் பாராட்டுகிறார்கள். முனிவர்கள் பலர் வந்தாரென்று சொல்ல வேண்டுமானால், 'முனிவர் வந்தார்; அகத்தியர் வந்தார்' என்று அவரைத் தனியே எடுத்துக் கூறுவது ஒரு வழக்கம். அதனால் அவருக்குத் தனித் தலைமை இருந்ததென்பது தெரியவரும்.

கம்பர் அவரையும் திருமாலையும் ஒப்பிடுகிறார். திருமால் தம்முடைய நெடிய உருவத்தால் மூவுலகங் களையும் அளந்தார்; அகத்தியரோ குறுகிய உருவத்தைக் கொண்டே உலகத்தை அளந்தாராம்; அப்படி அளப்பதற்கு 'நீண்ட தமிழ்' அவருக்குத் துணை செய்ததாம். 'நீண்ட தமிழால் உலகை நேமியின் அளந்தான்' என்று கூறுகிறார். நேமியின்-திருமாலைப் போல

மற்ெருரு கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தர் அகத்திய முனிவரை ஒரு செய்யுளில் மிகச் சிறப்பாகப் பாராட்டுகிருர். அம்முனிவர் வாழும் பொதிய மலேயி லிருந்து வந்த அழகிய மகளிர் சிலர் சோழ ராஜதானி யில் இருக்கிருர்கள். விடியற்காலேயில் அந்தப் பெண் களின் தோழிமார் அவர்களே எழுப்பிக் கதவு திறக்கும் படி சொல்கிருர்கள். இவ்வாறு எழுப்பிக் கதவு திறக்கு மாறு சொல்லும் பகுதி, **பரணி** என்ற ஒருவகைத் தமிழ் நூல்களின் முதலில் அமைந்திருக்கும். மலயவரை அரமகளிரை விளித்துக் 'கடை திறமின்' என்று சொல்ல வந்தவர்கள், அந்த மலேக்கு உரிய அகத்திய முனிவரின் பெருமையைக் கூறிச் சிறப்பிக்கிருர்கள்.

அகத்திய முனிவர் வருகிருர். அவர் எழுந்தருளும் போது வேத சாஸ்திரங்களெல்லாம், 'இவன் எல்லாப் பொருள்களேயும் மூன்று தமிழுக்குள் அடக்கி முடிக் கின்றவன். இவன் செயலால் நமக்குள்ள பெருமை யெல்லாம் போய்விடும். ஆகவே இவனேப் புகழ்ந்து இவன் திருவருளுக்குப் பாத்திரமாக வேண்டும்' என்று எண்ணி அவனேத் துதி செய்கின்றனவாம்.

**'முடிதும் எனமறை முதலிய பரவவும்.'**

[முடிந்துவிடுவோமென்று எண்ணி வேதம் முத லியவை துதிக்கவும்.]

'இதியாசம் முதலானவை பவிஷ்யமான எதிர் காலமும் உணர்வன ஆதலால், அகத்தியன் பண்டு மகாதேவர் அருளிச்செய்ய வடக்கினின்றும் தெற்கு நோக்கிப் போதுகின்ற காலத்தில், இவன் வேதாதி சாத்திரமான நம்மையெல்லாம், "அநந்தாவை

வேதா;" என்னும் கீர்த்தியற, மூன்று தமிழாக்கி முடிக்கின்றான் என' எண்ணியதாக உரையாசிரியர் வியாக்கியானம் செய்கிறார்.

அடுத்தபடி என்ன நிகழ்கிறது? அசுரரும் அரக்கரும், 'சிவபெருமான் திருவருளைப் பெற்றவர் வருகிறார்; இவர் முன் எதிர்ப்பட்டால் அடியோடு தொலைத்துவிடுவார்' என்று பயந்து ஓடுகிறார்களாம். விந்தியமலையை அக்குறு முனிவர் அடக்கிய செய்தியைக் கேட்ட ஏழுமலைகளும், 'இவருக்கு முன் நாம் நிமிர்ந்து நின்றால் நம்மையும் பாதாளத்தில் அமிழ்த்திவிடுவார்' என்று மனம் குலைந்தனவாம். பண்டு விருத்திராசுரன் கடலுக்குள் மறைந்துவிட அகத்தியர் அக்கடல் நீரை ஆசமனம் செய்து அவனை வெளிப்படுத்தினார். ஒரு கடலை உள்ளங்கையால் முழுதும் உண்ட முனிவராகையால் ஏழு கடல்களும், 'நம்மையும் இவர் என்ன செய்வாரோ!' என்று மறுகினவாம்.

> 'முறிதும் எனநிசி சரர்குலம் இரியவும்
> முரிதும் எனஎழு குலகிரி குலையவும்
> முளிதும் எனஎழு புணரிகள் மறுகவும்'

வருகிறார் அகத்தியர். இதோடு போகவில்லை.

சுவர்க்கலோகத்தை அடையவேண்டுமானால் தவமும் தானமும் செய்ய வேண்டும். வடக்கே இமாசலத்தில் சிவபெருமான் திருமணத்தில் கூட்டத்தால் பாரம் அதிகமாகிப் போய்விடவே தென்பூமி உயர்ந்துவிட்டது. வானுலகத்தை எட்டிப் பிடிக்கும் அளவுக்கு உயர்ந்துவிட்டது. நினைத்தால் தென்னாட்டில் உள்ளவர்கள் பக்கத்தில் உள்ள ஊருக்குப் போகிறவர்களைப் போலச் சுவர்க்க லோகத்துக்

குப் போய்விடலாம். இப்படி, தானும் பொன்னுலகமாகிய தேவலோகத்தை எட்டிப் பிடிக்கும் நிலையில் இருப்பதைக் குறித்துப் பூமி முதலில் சந்தோஷப்பட்டதாம். அகத்திய முனிவர் தென்னாட்டுக்கு எழுந்தருளுகிறார் என்ற செய்தி தெரிந்ததும் அது அற்ப சந்தோஷமாயிற்று ; மகிதலம் மனம் தளரலாயிற்று.

நகுஷன் என்ற ஒருவன் முன்பு பல யாகங்களைச் செய்து இந்திர பதவியை அடைந்தான். அந்தப் பதவியைப் பெற்றவுடன் அவன் செய்ய விரும்பிய முதற் காரியம் இந்திராணியின் அந்தப்புரத்துக்குப் போக வேண்டுமென்பதே. பல்லக்கில் ஏறிக்கொண்டான். முனிவர்களைக் கூப்பிட்டுப் பல்லக்கைச் சுமக்கச் சொன்னான். காமமும் அகங்காரமும் மலிந்த அவனைச் சுமந்த முனிவர்களுள் அகத்தியரும் ஒருவர். அவர் முன் தண்டைப் பிடித்து வந்தார். மனோ வேகம் மிக்க நகுஷன் தன் காலை நீட்டி, 'விரைவில் போங்கள்' என்று அகத்தியரை முடுக்கவே, அவன் கால் முதுகிலே பட்டது. உடனே அகத்தியர் சினந்து அவனைப் பாம்பாய் விழும்படி சபித்தார். நகுஷன் இந்திர பதவியை இழந்து பெரும் பாம்பாய் விழுந்து துன்புற்றான். இது புராணக் கதை.

இதை அறிந்த பழைய தேவேந்திரன் அகத்தியர் வருகையைக் கண்டு பயந்து, அவர் வரும்போதே முன் சென்று அவர் திருவடியை வருடுகின்றானாம். இவ்வாறு வரதனாகிய தமிழ் முனிவரன் எழுந்தருளுகிறானாம்.

**'முடிபூம் எனமறை முதலிய பரவவும்**
**முறிதும் எனநிசி சரர்குலம் இரியவும்**
**முரிதும் எனஎழு குலகிரி குலையவும்**
**முளிதும் எனஎழு புணரிகள் மறுகவும்**

மடிதும் எனமகி தலம்நிலை தளரவும்
மறிதும் எனஅடி சுரபதி வருடவும்
வரதன் ஒருதமிழ் முனிவரன் வரவரும்
மலய வரையர மகளிர்கள் திறமினே!'

என்று வருகிறது பாட்டு. இது தக்கயாகப் பரணியில் உள்ளது.

இது கற்பனையாக ஒட்டக்கூத்தர் அமைத்துக் காட்டும் காட்சிதான். ஆனாலும் அகத்திய முனிவரைத் தமிழ் நாட்டார் எப்படியெல்லாம் கொண்டாடினார்க ளென்று தெரிந்துகொள்வதற்கு இந்தப் பாட்டும் ஒரு சிறந்த உதாரணமாகும்.

அகத்தியரைப்பற்றிப் புராணங்களிலும், பிற நூல் களிலும், கர்ணபரம்பரையிலும் வழங்கும் கதைகளுக் குக் கணக்கு வழக்கே இல்லை. அவர் தலைமேல் எத்தனையோ நூல்களைச் சுமையாகச் சுமத்தி யிருக் கிறார்கள். அந்த அந்தக் காலத்தில் இவ்வாறு அவர் தலைமேல் ஏறும் பாரத்தை இறக்கிவைத்து, 'இப்படி யெல்லாம் பொய்யான சுமைகளை ஏற்றுகிறீர்கள்' என்று குறிப்பாகச் சில அறிஞர்கள் தெரிவித்திருக்கிறார்கள்.

அகத்தியர் தலையிலே ஏறிய நூல்களில் பாட்டி யல் என்பது ஒன்று. பிள்ளைத்தமிழ், உலா, கோவை என்பவை போன்ற பிரபந்தங்களின் இலக்கணங்களை யும், எழுத்துக்களுக்கு நட்சத்திரம், பொருத்தம் முதலிய இலக்கணங்களையும் வகுத்துச் சொல்லும் இலக்கண நூல்களைப் பாட்டியல் என்று சொல்வார்கள். இவ் வகை இலக்கணங்கள் பிற்காலத்தில் உண்டாயின. எதையும் பழைய மனிதர்கள் தலையில் போட்டால் அதற்கு ஒரு கௌரவம் உண்டாகி விடுவது இந்த

நாட்டு வழக்கம். ஆகவே அகத்தியர் ஒரு பாட்டியலை இயற்றியதாக ஒரு கட்டுக் கதையும், அதன் விளைவாக ஒரு பாட்டியல் நூலும் இந்த நாட்டில் எழுந்தன. அந்த நூலைப் பார்த்த சில அறிஞர்கள் 'அட பாவமே! அகத்தியர் தலையில் இதையுமா சுமத்தவேண்டும்!' என்று தலையில் அடித்துக்கொண்டார்கள். தொல்காப்பியத்துக்கு உரை எழுதிய பேராசிரியர் என்னும் பெரியார், அகத்தியர் பாட்டியல் இயற்றினரென்று சொல்வது தவறு என்று கண்டிக்கிறார்.

இலக்கியத்திலிருந்து வைத்தியத்துக்கு அகத்தியரை இழுத்துப்போய் அவர் தலையில் கணக்கற்ற மூட்டைகளைச் சுமத்தியிருக்கிறார்கள், சித்த வைத்தியத்தில் தேர்ச்சி பெற்றவர்கள், மிகவும் அருமையான உண்மைகளைக் கண்டுபிடித்தவர்கள், அவற்றைத் தம் பெயரால் வெளியிடுவதை விரும்பாமல், அகத்தியர் இயற்றியனவென்று போட்டு விட்டார்கள். நூலில் உள்ள பொருள்கள் மிகவும் சிறந்தவை; ஆகையால் இலக்கிய இலக்கண ஆராய்ச்சியில்லாதவர்கள் அதை நம்பிவிட்டார்கள். அகத்தியர் பெயரால் வழங்கும் சித்த வைத்திய நூல்கள் பல. இவருடைய பெயரோடு சார்த்தி இவற்றை உலகில் வழங்கச் செய்த பெரியார்கள் ஒரு விதத்தில் நல்ல நோக்கத்தோடு அந்தக் காரியத்தைச் செய்தாலும், பிற்காலத்தில் சரித்திர உணர்ச்சிக்கு மாறுபட்டு, 'அகத்தியர் என்று ஒரு பேர்வழி இருந்தாரா? இல்லையா?' என்றே சந்தேகப் படும்படியான நிலைக்கு அக்காரியங்கள் நம்மைக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கின்றன.

மாந்திரிகம், சித்த நூல் முதலியவைகளில் அகத்தியரை வலிய இழுத்து வைத்துச் சுமத்திய நூல்கள் இவ்வாறே பல உண்டு.

சைவப் பெருமக்களும் அகத்தியரை விடவில்லை. அகத்தியருடைய கைபடாத நூலுக்கு மதிப்பே இல்லை யென்று நினைத்தார்களோ, என்னவோ! **அகத்தியத் தேவாரத் திரட்டு** என்று ஒரு திரட்டு இப்போது சைவர்களால் பாராயணம் செய்யப் பெற்று வருகிறது. வைஷ்ணவர்கள் திவ்யப் பிரபந்தம் முழுமையும் பாராயணம் செய்வது கஷ்டமாக இருப்பதுபற்றி முக்கியமான பகுதிகளைத் தொகுத்து '**நித்தியாநுசந்தானம்**' என வைத்து ஓதி வருகிறார்கள். தேவாரமோ திவ்யப் பிரபந்தத்தைவிடப் பெரியது. பக்தி மிகுந்த சைவர்கள் அதனை முற்றும் பாராயணம் செய்வதென்பது இயலாத காரியம். ஆகவே, மிகவும் முக்கியமான பதிகங்களைத் தொகுத்துத் தினந்தோறும் பாராயணம் பண்ணும்படி ஒரு திரட்டை அமைத்துக்கொண்டால் நலம் என்று ஒரு சைவருக்குத் தோன்றியது. அவர் மிக்க பக்தியோடு இருபத்தைந்து பதிகங்களைப் பொறுக்கி யெடுத்துத் தேவாரச் சுருக்கத்தை அமைத்தார். அதை அவரும் அவர்பால் மதிப்புள்ள பிறரும் பாராயணம் செய்யலாயினர். அந்தத் திரட்டுக்குப் பெருமை வரவேண்டும் என்று கருதியவர்கள் அதற்கு 'அகத்தியத் தேவாரத் திரட்டு' என்ற பெயரையும், ஒரு கதையையும் சிருஷ்டி செய்து மிதக்கவிட்டார்கள். தமிழ் நாட்டில் கதை படர்ந்தது; புத்தகத்தின் மதிப்பும் உயர்ந்தது. கதை இதுதான்:

சிவாலய தேவர் என்னும் பக்தர் ஒருவர் தேவா ரத்தில் மிகவும் ஈடுபாடுடையவர். தினந்தோறும் தேவாரப் பதிகங்களை அடிமுதல் இறுதிவரையில் பாராயணம் செய்வதையே விரதமாகக் கொண்டிருந் தார். இந்தப் பாராயணத்தால் வேறு வேலை ஒன்றை யும் கவனிக்க முடியாமற் போயிற்று. தேவார பாரா யணத்தை விடவும் மனமில்லை. இந்த நிலையில் ஒரு நாள் அகத்திய முனிவர் அவர்முன் பிரசன்னமானார். சிவாலய தேவர் அவரை வணங்கி வாழ்த்திய பிறகு தேவார பாராயணத்தைப் பற்றிச் சொல்லித் தம் சங்கடமான நிலையையும் தெரிவித்தார். உடனே அகக்தியர் மனமுவந்து தேவாரத்தில் தலைமைபெற்ற இருபத்தைந்து பதிகங்களைத் தேர்ந்தெடுத்து ஒரு முறைப்படுத்தித் திரட்டித் தந்து, 'இவற்றைப் பாரா யணம் செய்தால் தேவாரம் முழுவதையும் பாரா யணம் செய்த பயனைப் பெறலாம்' என்று சொல்லிச் சென்றாராம். அதுமுதல் அந்தத் 'திரட்டையே' சிவாலய தேவர் பாராயணம் செய்யலானார். அகத் தியரால் திரட்டப்பெற்றதாதலின், அகத்தியத் தேவா ரத் திரட்டு என்ற பெயர் அதற்கு ஏற்பட்டது.

கதை நன்றாகத்தான் இருக்கிறது. 'அகத்தியர் காலம் எது? தேவாரம் பாடிய மூவர் காலங்கள் எவை?' முதலிய கேள்விகளைச் சரித்திரக்காரர்கள் எழுப்பினால், 'அகத்தியர் தெய்வ முனிவர்; எந்தக் காலத்திலும் இருப்பார்; எந்த நடையிலும் பாடுவார்; அவர் ஒரு பெரிய சித்தர்' என்று பதில் சொல்லும் காலம் போய்விட்டது.

# 7

# குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர்

அகத்தியரிடம் எவ்வளவோ பேர்கள் தமிழ்ப் பாடம் கேட்டு வந்தார்கள். அவர்களுள் முக்கியமான வர்கள் பன்னிரண்டு மாணுக்கர்களே. அந்தப் பன் னிரண்டு பேரும் தனித்தனியே இலக்கண நூல்களை இயற்றினுர்கள் ; எல்லோரும் சேர்ந்து சில இலக்கணங் களை இயற்றியதாகவும் சொல்வது உண்டு.

பன்னிரண்டு மாணுக்கர்களுள் தொல்காப்பியர் சிறந்தவர், அவர் ஒரு முனிவர். புலன் அழுக்கற்ற அந்தணுளர். அகத்தியர் அவரிடம் அதிக அன்பு பாராட்டி வந்தார். கடைசியில் அகத்தியருக்கும் தொல் காப்பியருக்குமே மன வேறுபாடு நேர்ந்துவிட்டதாம். அதற்குக் காரணமாக ஒரு வரலாறு வழங்குகிறது.

அகத்தியர் வட நாட்டிலிருந்து தென்னுட்டுக்கு வரும்போது, இடையே லோபாமுத்திரையைக் கல் யாணம் செய்துகொண்டார். தென்னுட்டுக்கு லோபா முத்திரையையும் உடனே அழைத்துக்கொண்டு போக விரும்பவில்லை. "நான் தெற்கே போய் வசதியான இடத்தை அமைத்துக்கொண்டு உனக்கு ஆள் அனுப்பு கிறேன். அப்பொழுது நீ வரலாம்" என்று சொல்லிச் சென்றுர்.

முனிவர் பொதிய மலையைத் தமது உறைவிட மாக்கிக்கொண்ட பிறகு, தம் மனைவியை அழைத்து

வர எண்ணினார். தொல்காப்பியரை விளித்து அவளை அழைத்துவரும்படி கட்டளை யிட்டு அனுப்பினார். அப்போது, "நீ அழைத்துவருகையில், அவளை நெருங்காதே. குரு பத்தினிக்கு நாலு கோல் தூரத்தில் இருந்து பழகவேண்டும். இந்த ஆசாரத்துக்கு விரோதம் பண்ணாதே!" என்று சொல்லி விடுத்தார்.

தொல்காப்பியர் லோபாமுத்திரை இருந்த இடத்துக்குச் சென்று அழைத்துவந்தார். வருகையில் நாலு கோல் அளவு இடைவெளி விட்டே நடந்தார். காடும் மலையும் கடந்து வந்தவர்கள் வையைக் கரையை அணுகினர். வையையில் அப்பொழுது அதிக நீர் இல்லை. ஆதலின், இருவரும் அதில் இறங்கி வந்தனர். கரையை அணுகுவதற்கு முன் திடீரென்று அந்த நதியில் வெள்ளம் பெருகலாயிற்று. தொல்காப்பியர் எப்படியோ கரை சேர்ந்துவிட்டார். லோபாமுத்திரை வெள்ளத்தில் அகப்பட்டுக்கொண்டு தவித்தாள்.

அவளை எப்படிக் கரையேற்றுவது? குரு பத்தினியாகிய அவளைக் கை தொட்டு இழுத்துக் கரையேற்றினால் அகத்திய முனிவரின் சாபத்திற்கு உள்ளாக வேண்டி வருமே! தொல்காப்பியர் சிறிது யோசித்தார். பிறகு கரையிலிருந்த ஒரு மூங்கிலை ஒடித்து அந்தக் கோலை நீட்டினார். லோபாமுத்திரை அதைப் பற்றிக் கொண்டு கரையேறினாள்.

தொல்காப்பியர் தம் பத்தினியை அழைத்து வந்ததைக் கண்டு மிக்க மகிழ்ச்சியில் ஆழ்ந்த அகத்தியருக்குச் சிறிது சந்தேகம் ஏற்பட்டது. "நாலு கோல் தூரம் விட்டு நடந்து அழைத்து வந்தாயா?" என்று

தொல்காப்பியரைக் கேட்டார். அவர் அவ்வாறு அழைத்து வந்ததாகவும், அவசியம் நேர்ந்தமையால் வையையாற்றில் மாத்திரம் மூங்கிற்கோலைப் பற்றிக் கொண்டு கரையேறச் செய்வித்ததாகவும் சொன்னார்.

முனிவருக்குச் சினம் மூண்டது. "கற்புடை மங்கையர் தம் உயிரையும் பொருட்படுத்தாமல் தருமத்தைக் கடைப்பிடிப்பார்கள். அந்தக் கற்பே அவர்களைக் காப்பாற்றும். அப்படி இருக்க நீ ஆசாரத்துக்கு மாறாக நடந்துகொண்டாய். இந்தா, பிடி சாபம்! உனக்குச் சுவர்க்க பதவியே இல்லை" என்று சீறினார். லோபாமுத்திரையையும் சபித்தார். "குற்றமற்ற எங்களைச் சபித்ததனால் நாங்கள் வருந்தவில்லை. எங்களுக்குச் சுவர்க்க பதவி இல்லையென்றால் தேவரீருக்கும் அது இல்லாமற் போகட்டும்" என்று தொல்காப்பியர் சொல்லி அகத்திய முனிவரைப் பிரிந்தார்.

தமிழாராய்ச்சியில் ஊற்றம் பெற்ற தொல்காப்பியர் சும்மா இருக்கவில்லை. '**தொல்காப்பியம்**' என்ற இலக்கண நூலை இயற்றத் தொடங்கினார். இயல் தமிழின் வகைகளாகிய எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றுக்கும் உரிய விரிவான இலக்கணங்களை யோசித்துத் தொகுத்து வகைப்படுத்தி அந்த நூலை இயற்றலானார். தொல்காப்பியர் வடமொழியிலும் இணையற்ற புலமை உடையவர். இந்திரனால் செய்யப்பட்டதென்று சொல்லும் '**ஐந்திரம்**' என்னும் இலக்கணத்தை நன்றாக ஆராய்ந்தவர். ஒரு பாஷைக்குரிய இலக்கண நூல் இன்னமாதிரி அமைய வேண்டும் என்று சிந்திப்பதற்கு ஐந்திரம் அவருக்குத் துணையாக இருந்தது. அகத்திய முனிவர் இயற்றிய இலக்கணத்

தில் பல விதிகள் இடம் மாறி இருந்தன. எழுத்தின் இலக்கணத்தைச் சொல்லின் இலக்கணத்தோடு கலந்து சொல்லியிருந்தார். முதல்முதலில் நூல் செய்தால் அந்த மாதிரியான குறைபாடுகள் இருப்பது இயல்புதான். நாளடைவில் பலருடைய முயற்சியினால்தான் நல்ல ஒழுங்குமுறை ஏற்படும்.

தொல்காப்பியர், கூடியவரையில் இலக்கணங்கள் ஒன்றோடொன்று கலவாமல் அந்த அந்தப் பகுதியில் அமையும்படி நூல் இயற்றினார். தம் காலத்திலும் அதற்கு முன்பும் பெரியோர்கள் செய்திருந்த இலக்கி யங்களையெல்லாம் நன்றாக ஆராய்ந்தார். அவற்றில் கண்ட மரபுகளையெல்லாம் உணர்ந்து தம் இலக்கண நூலில் அமைத்துக்கொண்டார்.

அறிவும் ஆற்றலும் தவ விரதமும் உடைய அவருடைய முயற்சி மிகச் சிறப்பாக நிறைவேறியது. தொல்காப்பியமென்னும் இலக்கணத்தை அவர் இயற்றி முடித்தார். அந்தக் காலத்தில் யார் எந்த நூல் இயற்றி னாலும் அதை அறிஞர்கள் கூடிய சபையில் அரங் கேற்றுவது வழக்கம். அப்படிச் செய்யாவிட்டால் அந்த நூலைத் தமிழ் நாட்டார் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

பாண்டியன் மாகீர்த்தி என்பவன் தமிழ் நாட்டை ஆண்டு வந்த காலம் அது. அவன் முன்னிலையில் தக்க பெரியார் ஒருவருடைய தலைமையில் தொல்காப்பி யத்தை அரங்கேற்ற வேண்டும் என்ற ஏற்பாட்டைப் புலவர்களும் பிறரும் செய்யலாயினர். அரங்கேற்றத்தில் தலைமை வகிக்க, நியாயமாக அகத்தியர் வர வேண்டும். தொல்காப்பியர்மேல் சினம் பூண்ட அவர் எங்கே வரப்

போகிருர்? ஆகவே அக்காலத்தில் அவருக்கு அடுத்த படியாகப் புகழ்பெற்ற பெரியார் ஒருவர் அதங்கோடு என்ற ஊரில் இருந்தார். அவர் அந்தணர் என்று தெரிகிறதேயொழிய அவருடைய பெயர் இன்னதென்று தெரியவில்லை. அவரைக் கொண்டு அரங்கேற்றத்தை நடத்துவதாக ஏற்பாடு ஆகிவிட்டது.

இந்தச் செய்தி அகத்தியர் காதுக்கு எட்டியது. "அப்படியா சமாசாரம்! இவன் இலக்கணம் செய்வதையும், அரங்கேற்றம் நடைபெறுவதையும் பார்த்து விடுகிறேன்!" என்று சினம் மூண்டு கர்ஜித்தார். அதை அரங்கேற்றக்கூடாதென்று அதங்கோட்டு ஆசானுக்குத் தெரிவித்தார். பாவம்! அந்தப் பெரியவர் தர்மசங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டார். அரசன் அரங்கேற்றச் சொல்கிருன்; அகத்தியர் வேண்டாமென்கிருர். இந்த நிலைமையில் என்ன செய்வதென்று விளங்காமல் அவர் தத்தளித்தார். கடைசியில் அகத்தியருக்கு ஒரு வகையாகச் சமாதானம் சொன்ஞர். "அரங்கேற்றுவதைத் தடுக்க வேண்டாம். ஆனல் நான் அந்த நூலுக்குக் குற்றத்தின்மேற் குற்றம் சொல்லி அவரைச் சளைக்கும்படி செய்துவிடுகிறேன்" என்று கூறிப் புறப்பட்டார்.

அரங்கேற்றம் நடைபெற்றது. அதங்கோட்டு ஆசிரியர் இடையிடையே மிகவும் நுணுகிய கேள்விகளைக் கேட்டார். குற்றமென்று சிலவற்றைச் சொன்ஞர். தொல்காப்பியர் அவற்றிற்கெல்லாம் தக்க விடைகளைக் கூறிஞர், அதங்கோட்டு ஆசிரியரே வியக்கும்படியாக இருந்தன, அவர் கூறிய சமாதானங்கள்.

தொல்காப்பிய அரங்கேற்றம் முடிவடைந்தது. தமிழ்நாடு முழுவதும் குருவுக்கு மிஞ்சிய சிஷ்யராகிய தொல்காப்பிய முனிவரின் பெருமையை நன்கு உணர்ந்துகொண்டது. தொல்காப்பியம் என்னும் இலக்கணம் தமிழர் உள்ளத்தைக் கவர்ந்தது. அது காறும் அத்தனை ஒழுங்கான முறையில் ஓர் இலக்கண நூல் தமிழ் நாட்டில் வழங்காமையால் தொல்காப்பி யத்தின் மதிப்பு, பன்மடங்கு அதிகமாயிற்று. இடைச் சங்கப் புலவர்கள் அகத்தியத்தோடு அதனையும் தங்க ளுக்கு உரிய இலக்கணமாகக் கொண்டார்கள்.

நாளடைவில் அகத்தியத்தைப் பயில்பவர் குறைந் தனர். தொல்காப்பியமே புலவருக்கு ஆதார நூலாகி விட்டது. 'தொல்காப்பியன்றன், ஆணையில் தமிழ் நூல் அறிந்தோர்க்குக் கடனே' என்று ஒரு புலவர் சொல்கிறார். தமிழ் உலகத்தில் இலக்கிய இலக்கண அரசாட்சியில் தொல்காப்பியருடைய ஆணை புலவர் களால் அன்புடன் போற்றிக் கொள்ளப்பட்டது. அவர் செலுத்திய ஆணைக்குப் பணிந்து ஒழுகினர் பெரியோர். அந்த ஆணைவடிவாக இருப்பதுதான் **தொல்காப்பியம்** என்னும் இலக்கண நூல்.

குருவுக்கு மிஞ்சிய புகழைப் பெற்ற தொல்காப் பியர் நூல் இன்றளவும் சிறந்ததாகவும் இணையற்ற தாகவும் தமிழ் மொழிக்கு மேல்வரிச் சட்டமாகவும் விளங்குகின்றது.

# 8

# லட்சணமும் அவலட்சணமும்

'சிறு குழந்தையாய், லட்சணமாய், காலையில் எழுந்திருந்து புத்தகத்தை வைத்துக்கொண்டு படிக்காமல்...'

'சீ அவனும் ஒரு மனிதனு! அவனும் அவன் லட்சணமும்...'

'லட்சணமாக நாலு கீர்த்தனம் பாடி இரண்டு ராகம் பாடி...'

'அவன் பேசினது கச்சிதமாக, லட்சணமாக இருந்தது.'

இம்மாதிரி நம்முடைய பேச்சிலே லட்சணத்தை ஒரு நாளைக்கு நூறு தடவைகள் கூடச் சொல்லி விடுகிறோம். லட்சணமாக ஒரு காரியம் செய்கிறது, லட்சணத்தோடுள்ள ஒரு பொருளைப் பார்க்கிறது என்ற விஷயங்களில் நமக்குச் சந்தோஷம் உண்டாகிறது. லட்சணத்தினுல் சந்தோஷமும் அவலட்சணத்தினுல் வெறுப்பும் உண்டாவது இயற்கைதானே?

உலகத்தில் உண்டான எல்லாப் பொருள்களுக்கும் லட்சணம் உண்டு; அந்த லட்சணத்துக்குப் புறம்பான அவலட்சணமும் உண்டு. ஒரு காலத்தில் ஒரு தேசத்தில் ஒரு விஷயம் லட்சணமாக இருக்கும்; அதையே வேறொரு காலத்திலும் வேறொரு தேசத்தி

லும் அவலட்சணமாகக் கருதுவார்கள். காலதேச வர்த்தமானங்களால் லட்சணம் இன்னதுதான் என்ற நியதி வேறுபட்டாலும். லட்சணமாக இருக்கவேண்டுமென்ற எண்ணம் மாத்திரம் வேறுபடுவதே இல்லை; லட்சணமே வேண்டாம் என்று சொல்வது மனித ஜாதிக்கு இயல்பும் அன்று.

மனிதனுக்குச் சொந்தமான உடம்பு, உடை, ஆபரணம் ஆகியவற்றின் லட்சணங்களைப்பற்றி அவன் எவ்வளவோ ஆராய்ச்சி செய்திருக்கிறான், அவன் உண்ணும் உணவு, பழகும் முறைகள், பேசும் பாஷை எல்லாவற்றிலும் அழகும் நன்மையும் ததும்பவேண்டுமென்று ஆசைப்படுகிறான். உளுந்தும் நெய்யும் சர்க்கரையும் சேர்ந்து உருவெடுக்கும் ஜிலேபிக்கு உருவமும் நிறமும் வேண்டுமென்று சிரமப்படுகிறான்; கண்ணுக்கு முதலில் லட்சணமாக இருக்க வேண்டுமென்று அவன் விரும்புகிறான்.

ஆகவே மனிதன் உபயோகப்படுத்தும் ஒவ்வொரு பொருளுக்கும் அவனுடைய கொள்கைப்படி சில லட்சணங்கள் உண்டென்பதை யாவரும் ஒப்புக்கொள்கிறார்கள். அப்படியானால் அவன் பேசும் பாஷைக்கு மாத்திரம் லட்சணம் வேண்டாமா? அது அவலட்சணமாக, லட்சணத்தைப் புறக்கணிப்பதாக இருக்கலாமா?

இலக்கணம் என்ற தமிழ் வார்த்தை லட்சணம் என்ற வடமொழி வார்த்தையின் வேறு உருவம். லட்சணம் என்ற வார்த்தை தமிழில் இலக்கணம் என்று மாறியிருக்கிறதனால் அதன் கருத்து மாறவில்லை. பழங்காலத்தில் இயல், மரபு என்று இலக்கணத்தை வழங்கினார்கள். பாஷைக்கு அழகு செய்

வனவாகிய பொருள்களை அறிஞர்கள் தொகுத்து இலக்கணமென்று சொல்லி வருகிறார்கள்.

பாஷையில் பல பகுதிகள் உண்டு, எழுத்துக்கள், எழுத்துக்கள் சேர்ந்த வார்த்தைகள், வார்த்தைகள் சேர்ந்த வாக்கியங்கள், வாக்கியங்களால் புலப்படும் கருத்து, வசனம், செய்யுள் என்று ஒன்றுக்கு ஒன்று தொடர்பு உள்ள பல பகுதிகள் இருக்கின்றன. இவற்றைப்பற்றிய செய்திகளைச் சொல்லும் சாஸ்திரத்தைத்தான் இலக்கணமென்று சொல்லுகிறோம். நம்முடைய தேகத்தில் இன்ன இன்ன உறுப்புக்கள் இருக்கின்றன, இன்ன இன்ன முறையில் அந்த உறுப்புக்கள் வேலை செய்கின்றன, அவை முறைமாறி வேலை செய்தால் இன்ன இன்ன துன்பங்கள் உண்டாகும் என்று உடற்கூற்று நூல் சொல்லுகிறது. அது போலவே மொழியின் இலக்கணத்தை இலக்கண நூல் சொல்லுகிறது.

தமிழில் இந்த இலக்கண ஆராய்ச்சி முதலில் சிறிய அளவிலேயே இருந்தது. எல்லாப் பாஷைகளிலும் இலக்கண ஆராய்ச்சி வரவரத்தான் விரிந்து வந்திருக்கின்றது. பெரியவர்கள் நூல்களை இயற்ற இயற்ற அவைகளுக்குள்ளே என்ன என்ன அழகுகள் இருக்கின்றன என்பதை ஆராய்ந்து அவற்றைத் தனியே இலக்கணம் என்ற பெயரால் பின் வந்த அறிஞர்கள் தொகுத்து அளித்தார்கள். பொருள் ஒன்று இருந்தால் தான் அதன் தன்மை நமக்குத் தெரியும். இலக்கியமாகிய மூலப் பொருள் உண்டாக உண்டாக அவற்றின் இலக்கணங்களை ஆராய்ந்து வெளிப்படுத்தும் முயற்சியும் எழுந்தது.

தமிழில் இப்போது இலக்கண ஆராய்ச்சி மிக விரிந்துவிட்டது. அகத்தியர் இயற்றிய அகத்தியம் என்ற இலக்கண நூல், இப்போதுள்ள விரிவைப் பார்க்கும்போது மிகச் சுருக்கமாக இருந்திருக்கவேண்டு மென்றுதான் தெரிகிறது. தமிழை இயல், இசை, நாடகம் என்று மூன்று பிரிவாகப் பிரித்தார்கள். அந்த மூன்றுக்கும் ஒருங்கே இலக்கணம் இயற்றினர் அகத்தியர். அவர் சிஷ்யராகிய தொல்காப்பியர் இயலுக்கு மாத்திரம் இலக்கணம் வகுத்தார். அந்த இலக்கணத்தை மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டார். அ, ஆ, இ, ஈ என்று வரும் தமிழ் எழுத் துக்களைப்பற்றிய ஆராய்ச்சியைத் தனியே **எழுத் ததிகாரம்** என்ற முதற் பகுதியாகப் பிரித்துச் சொல்லி யிருக்கிறார். எழுத்துக்களால் ஆன சொற்களையும் சொற்கள் வாக்கியங்களாகச் சேர்ந்து பயன்படும் முறையையும் ஆராயும் பகுதிக்குச் **சொல்லதிகாரம்** என்ற பெயரை வைத்தார், வாக்கியங்களால் சொல் லப்படும் விஷயத்தைப்பற்றி ஆராயும் பகுதிக்குப் **பொருள் அதிகாரம்** என்று பெயர்.

தொல்காப்பியத்தில் ஒவ்வோர் அதிகாரத்திலும் ஒன்பது ஒன்பது பிரிவுகள் இருக்கின்றன. அந்தப் பிரிவுகளுக்கு இயல் என்று பெயர். நட்சத்திர மண்ட லத்தில் இருபத்தேழு நட்சத்திரங்கள் சிறப்பாக நின்று சுடர் விடுவதுபோலத் தமிழ் வானத்தில் தொல்காப்பி யர் இயற்றிய இருபத்தேழு இயல்கள் பாஷையைப் பற்றிய உண்மைகளை அறிவித்துக்கொண்டு சுடர் விடு கின்றன.

வடமொழியில் இலக்கணத்தை வியாகரணம் அல்லது சப்த சாஸ்திரம் என்று சொல்வார்கள். அது எழுத்து, சொல் என்ற இரண்டைப்பற்றியே சொல்லும். மற்ற விஷயங்களுக்குத் தனித்தனியே சாஸ்திரங்கள் இருக்கின்றன.

தொல்காப்பியத்தில் உள்ள பொருளதிகாரம், நூல்களில் சொல்லப்படும் பொருள்களின் இலக்கணங்கள், செய்யுட்களின் இலக்கணங்கள், அலங்காரம் முதலிய பல விஷயங்களைச் சொல்கின்றது. நாளாக ஆக இந்த அதிகாரத்திற் கண்ட இலக்கணங்கள் விரிந்து கொண்டே வந்தன. எழுத்து, சொல் என்ற இரண்டிலும் விசேஷ விரிவு இல்லாவிட்டாலும், பொருள் என்ற பகுதியில் அமைந்த செய்திகள் விரிந்து பலவேறு பிரிவுகளாகித் தனித்தனியே ஆராய்ச்சிக்கு உட்பட்டன. அதனால் தனித்தனி இலக்கண நூல்களும் உண்டாயின.

பொருளதிகாரத்தில் சொல்லப்படும் விஷயங்களுள் அகப்பொருள் என்பது ஒன்று. அது காதல் வாழ்வைப்பற்றிய செய்திகளை உடையது; அதைத் தனியே விளக்கும் நூல்கள் பிற்காலத்தில் எழுந்தன. பெரும்பாலும் போர் முறைகளைப்பற்றிச் சொல்லும் புறப்பொருள் என்ற பகுதியும் அப்படியே தனி நூல்களில் ஆராயப்பட்டது. செய்யுளியல் என்ற பகுதியில் தொல்காப்பியர் செய்யுளின் இலக்கணங்களைச் சொல்கின்றார். அவை தனியே விரிந்து பல யாப்பிலக்கண நூல்கள் உண்டாகக் காரணமாயின. உவம இயல் என்ற பிரிவில் சொல்லப்பட்ட இலக்கணங்களும் மெய்ப்பாட்டியலில் வரும் இலக்கணங்களும் விரிந்து அணியிலக்கண நூல்கள் ஆயின. தனிச் செய்யுளின் இலக்கணத்தைச் சொல்

லும் இலக்கண நூல்களை யாப்பிலக்கண நூல்களென்று குறிப்பார்கள்; பல செய்யுட்கள் அடங்கிய நூல்களின் இலக்கணத்தைச் சொல்லும் இலக்கண நூல்களைப் பாட்டியல்கள் என்று கூறுவார்கள். பிற்காலத்தில் நிகண்டுகள் பல உண்டாயின. தொல்காப்பியத்தில் உரி இயலில் நிகண்டைப் போலச் சொற்களின் பொருள்களை உரைக்கும் முறையைக் காணலாம்.

இப்படியாக எழுத்து, சொல், பொருள் என்று தொல்காப்பியர் சொன்ன லட்சணம் மிக மிக விரிந்து எழுத்திலக்கணம், சொல்லிலக்கணம், நிகண்டு, அகப் பொருள் இலக்கணம், புறப்பொருள் இலக்கணம், யாப்பிலக்கணம், அணியிலக்கணம், பாட்டியல் என்று பல வகைகளாயிற்று. வளர்ந்துவரும் பாஷையில் இலக் கியங்கள் வளர வளர இலக்கணங்களும் விரிவடை வது இயல்பேயாகும். இனியும் இலக்கணம் விரிவடைய வேண்டியதுதான். வடமொழியின் தொடர்பினால் தமிழ்ச் செய்யுள் இலக்கணமும் அணி இலக்கணமும் விரிவை அடைந்திருக்கின்றன. அப்படியே ஆங்கிலத் தின் தொடர்பினால் புதிய புதிய இலக்கணங்கள் தோன்றுவதற்கும் இடம் உண்டு. பாஷையின் வளர்ச்சிமுறையை ஆராயும் மொழி நூல் (Philology), இலக்கியத்தை மதிப்பிடும் ஆராய்ச்சி (Criticism) முதலிய வகைகள் மிக மிக விரிவடைய வேண்டும். அப்படி விரிவடைவதே தமிழின் பெருமைக்குக் காரணம் என்பதை அதனுடைய சரித்திரம் நமக்கு விளக்குகிறது.

# 9

# பயப்படாதீர்கள்!

இலக்கணம் என்றால் பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் முதல், வயசு வந்தவர்கள் வரையில் பயப்படுவதற்குக் காரணமாக ஆகிவிட்டது. இது இந்த நாட்டின் துரதிருஷ்டமென்றுதான் சொல்லவேண்டும். சட்டங்கள் மனித சமூகத்திற்கு உண்டாகும் துன்பத்தைப் போக்கவும், வாழ்க்கையில் மேலும் மேலும் நன்மைகளை உண்டாக்கவும் ஏற்பட்டவை. ஆனால் இந்தியாவைப் போன்ற நாடுகளில் சுதந்தரம் இல்லாதிருந்த காலத்தில் சட்டங்களைக் கண்டு ஜனங்கள் பயப்படுகிறார்கள். போலீஸ்காரனைக் கண்டு பயத்தைப் போக்கிக் கொள்வதுதான் நியாயம்; இங்கேயோ அவனைக் கண்டு அஞ்சி நடுங்குகிறார்கள்! இது யாருடைய தப்பு? போலீஸ்காரனுடைய நடத்தையிலும் தப்பு இருக்கிறது; நம்முடைய நடத்தையிலும் தப்பு இருக்கிறது. இருவரும் சேர்ந்துதான் 'போலீஸ்காரனென்றால் பயப்படுவதற்குரிய பேர்வழி' என்று தீர்மானம் செய்துவிட்டோம். உண்மையில், குற்றவாளிகளே போலீஸ்காரனைக் கண்டு பயப்படவேண்டும். பொதுஜனங்கள் பயப்படுவதோ, அவர்கள் பயப்படும்படி செய்வதோ நீதி அன்று.

நம் நாட்டுப் பாஷைகளில், அதிலும் தமிழில், இலக்கணம் இன்று போலீஸ்காரனுடைய நிலையை வகிக்கிறது. இலக்கணத்தைச் சொல்லிக் கொடுத்தவர்

களும் மாணுக்கர்களை அளவுக்கு மிஞ்சிப் பயமுறுத்தி விட்டார்கள். பொதுமக்களும் அதில் என்னதான் இருக்கிறது என்று தெரிந்துகொள்ளத் துணியாமல் அஞ்சி நடுங்கித் தூர வைத்துத் தொழுது வருகிறார்கள். இது உண்மையில் இரங்கத்தக்க விஷயம். மிகவும் சிக்கலான சட்ட நுணுக்கங்களையும் அரிய நுண்ணிய கணித விஷயங்களையும் சிக்கறுத்துத் தெளிய வைக்கும் தமிழர்களுக்கு இலக்கணம் ஒரு பூச்சாண்டியாக இருப்பதென்றால், குற்றம் இலக்கணத்தில் இல்லை. நம்முடைய அசட்டையோ அநாவசியமான பயமோதான் அந்தக் குற்றத்துக்குக் காரணம்.

இலக்கணத்தைக் கண்டு பயப்பட வேண்டிய அவசியமே இல்லை. பாஷை ஜீவநதி போன்றது. தமிழோ என்றும் ஜீவனுடன் ததும்பும் பெரிய நதி. இடையறாது, புனல் பரந்து பூம்பொழிலையும் வள வயலையும் செழிக்க வைக்கும் ஆறு அது. அந்த நதிக்குக் கரை போல இருப்பது இலக்கணம். இயற்கையான அழகைத் தடைப்படுத்திச் சிறையிடுவது இலக்கணத்தின் செயல் அல்ல. இயற்கையாக வரும் வெள்ளத்தை ஒழுங்கு படுத்தி யாவருக்கும் பயன்படுத்தும் கரையைப்போல, ஆன்றோர் வகுத்த நெறி இன்னதென்று அறிவித்துப் பின்னால் வருபவர்களுக்குப் பல சௌகரியங்களைச் செய்து கொடுக்கும் வழிகாட்டி போன்றது அது. அந்தக் கரையைக் காரணம் இல்லாமல் உடைப்பதோ, ஜலமே தெரியாமல் மலையைப்போல் உயர்த்தி மனித முயற்சியை வீணுக்குவதோ கூடாது. காலத்தின் மாறுபாட்டால் உடைந்த பகுதிகளைப் புதிய மண்ணினால் அடைத்துச் செப்பஞ் செய்வது போல, இலக்கணக்

கரையிலும் புதிய புதிய அமைப்புக்களைச் சேர்த்துக் கொள்ளலாம், இதற்கு இலக்கணம் இடம் கொடுக்கிறது. இலக்கணம் வளர்ந்து வந்த விதத்தை அறிந்தால் நாளுக்கு நாள் அது எப்படிக் காலத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டே வந்திருக்கிறதென்பதை உணரலாம்.

இலக்கணக் கரையை உடைத்தெறிவது பெரிய காரியம் அல்ல. சில இடங்களில் உடைப்பது அவசியமாகவும் இருக்கலாம். ஆற்றின் வெள்ள நிலை, காலத்தால் ஏற்பட்ட மாறுபாடு, கரையின் அமைப்பு ஆகிய எல்லாவற்றையும் நன்கு அறிந்த இஞ்சினீயர்களே மராமத்து வேலை பார்க்கத் தகுதியுடையவர்கள். கட்டப்பாரையும் கரண்டியும் உடையவர்களெல்லாம் கரையைச் செப்பஞ் செய்வதென்று வந்தால், கரையும் இராது, ஆறும் இராது; அழகான ஆற்றைக் காட்டாற்றைப் போன்ற நிலைக்குத்தான் கொண்டுவரும்படி நேரும்.

எவ்வளவோ விஷயங்கள் இலக்கணத்தில் புதிது புதிதாய்ச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இன்று ஒரு புதிய விதியை இலக்கணத்தில் சேர்க்கவேண்டும், பழையதை அகற்றவேண்டும் என்றால் அதற்கு இலக்கணத்தில் ஒவ்வொரு பகுதியிலும் இடம் வைத்திருக்கிறார்கள்.

இல்லையானால் பாஷை வளராது. தொல்காப்பியர் காலத்திலே இருந்த மாதிரி இன்று தமிழ்ப் பாஷை இருக்கவில்லை. எவ்வளவோ மாறியிருக்கிறது. தொல்காப்பியரே இன்று தமிழ் நாட்டுக்கு வந்தால் இன்றுள்ள பல வார்த்தைகளும் பல அமைப்புகளும் அவருக்கு விளங்கா.

இலக்கணத்தில் பாஷையைப் பற்றிய நுணுக்கமான விஷயங்களே சொல்லப்பட்டிருக்கின்றன என்று பலர் நினைக்கிறார்கள். இந்தக் காலத்தில் பத்திரிகையைப் படித்துத் தெரிந்துகொள்ளும் அளவுக்கு அறிவுடையவர்கள் கூட உணர்ந்து ரஸிப்பதற்குரிய விஷயங்களும் இலக்கண நூல்களில் இருக்கின்றன.

உபாத்தியாயர்களுக்குப் பயிற்சி அளிக்கும் பள்ளிக்கூடங்கள் இப்பொழுது பல இருக்கின்றன. அவர்களுக்குப் பாடமாகப் பல புத்தகங்களும் உள்ளன. இலக்கண நூல்களில் உபாத்தியாயரைப் பற்றியும் மாணாக்களைப்பற்றியும் சில செய்திகள் சொல்லப்படுகின்றன. 'உபாத்தியாயர் காலந்தவறாமல் இருக்க வேண்டும்' என்று சொல்கிறார்கள். இந்தியர்களுக்குக் காலந் தவறாமல் வேலைசெய்யும் திறமை இல்லையென்பது உலகறிந்த விஷயம் எல்லோரிடத்தும் இருக்கவேண்டும் என்று அறிஞர்கள் வற்புறுத்தும் இந்த வழக்கத்தை உபாத்தியாயர்களுடைய இலக்கணத்தைக் குறிக்கும் இடத்தில் இலக்கணங்கள் சொல்லுகின்றன. ஜனங்களெல்லாம் உபாத்தியாயரைக் கண்டாலே சந்தோஷப்பட வேண்டுமாம்; எல்லோரிடத்திலும் சுமுகமாக அவர் பழக வேண்டுமாம். அவருடைய உடம்பு, உடை, உள்ளம், செய்கை ஆகியவை எப்படி எப்படி இருக்கவேண்டுமென்று இலக்கண நூல்கள் சொல்கின்றன. மாணாக்கர்கள் எப்படிப் படிக்கவேண்டுமென்பதையும் அவற்றிலே காணலாம். நல்ல உபாத்தியாயர், கெட்ட உபாத்தியார், நல்ல மாணாக்கன், கெட்ட மாணாக்கன் என்றெல்லாம் வகுத்துச் சொல்லியிருக்கிறார்கள்.

எழுத்துக்கள் எப்படி உச்சரிக்கப்படுகின்றன, நாக்கை எப்படி மடித்தால் ஒரு குறிப்பிட்ட ஒலி உண்டாகும், எதற்காக அ, ஆ வை முதலில் வைத்திருக்கிருர்கள் என்பவை போன்ற விஷயங்களையும் இலக்கணம் சொல்கிறது.

வெகு தூரத்தில் யாரோ ஒருவர் வருகிருர்; அவர் ஆணு, பெண்ணு என்று தெரியாது; அவரைப்பற்றிப் பேசவேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்தால் அவள் என்று சொல்வதா? அவன் என்பதா?—இந்த மாதிரியான பல சிக்கல்களுக்குரிய விடையையும் இலக்கணத்தில் காணலாம்.

இலக்கண அறிவினுல் மற்ருெரு ரஸமான சமாசாரத்தையும் தெரிந்துகொள்ளலாம். தொல்காப்பியத்தைப் படித்தால் அவர் காலத்தில் இருந்த பொருள்கள், மனிதர், பேச்சு, வழக்கங்கள் முதலியவற்றை இலக்கண விதிகளிலிருந்து ஊகித்து அறிந்துகொள்ளலாம்.

ஆயிரம் என்ற வார்த்தையை வாக்கியத்தில் இந்த மாதிரி உபயோகிக்க வேண்டும் என்ற இலக்கணத்தைக் கொண்டு தொல்காப்பியர் காலத்தில் ஆயிரம் என்று எண்ணும் வழக்கம் இருந்ததென்று தெரிந்து கொள்ளலாம் அல்லவா? ஓரிடத்தில், 'கடற்பிரயாணம் செய்யும்போது பெண்களை அழைத்துக்கொண்டு செல்லக்கூடாது' என்று தொல்காப்பியர் சொல்லுகிருர். 'இந்தமாதிரி விஷயங்களைக் கூடவா இலக்கணம் சொல்கிறது?' என்று ஆச்சரியப்படுவீர்கள். காதல், துறவு, போர் முதலியவற்றைப்பற்றிய செய்திகளைக் கூடத் தொல்காப்பியர் சொல்லுகிருர்.

'காதலனும் காதலியும் முதலிலே சந்திக்கும் போது காதலிக்குப் பேசும் துணிவு வராது. நாணத்தால் அவள் மௌனமாக இருப்பாள். துணிவும் பெருமையும் உடைய காதலன்தான் தன் காதலை முதலில் வெளிப்படுத்துவான்.'

'இது நாவலா?' என்று நீங்கள் கேட்கலாம். ஆம். நாவலிலுள்ள செய்திகளையும் இதில் பார்க்கலாம். சுட்டெரிக்கும் கொள்கையை (Scorched Earth Policy) இன்றைய யுத்தங்களில் நாம் கேள்விப்படுகிறோம். பழங்காலத்தில் தமிழர்களுக்கும் இது தெரிந்திருந்தது என்பதற்குத் தொல்காப்பியச் சூத்திரங்கள் சாட்சி சொல்கின்றன.

'இந்த உலகம் பஞ்ச பூதங்களால் ஆகியது. எல்லாப் பொருள்களும் அந்த ஐந்தும் வேறு வேறு அளவிலே கலந்ததனால் அமைந்தனவே' என்று சொல்லும் தத்துவ சாஸ்திரியின் உபதேசங்கூடத் தொல்காப்பியத்தில் இருக்கிறது. இன்னும் என்ன என்னவோ இருக்கின்றன!

ஆகையால் 'தொல்காப்பியம்' என்ற உடனே பயப்பட்டு விடாதீர்கள்! அதிலும் யாவரும் தெரிந்து கொள்ளக்கூடிய சரக்குகள் பல இருக்கின்றன என்று நம்புங்கள்.

அவற்றை இனிமேல் கவனிக்கலாம்.

*

# 10

# தொல்காப்பியத்தின் முகவுரை

இந்தக் காலத்தில் அநேகமாகப் புத்தகங்களுக்கு முகவுரை எழுதும் வழக்கத்தை விடாமல் ஆசிரியர்கள் கடைப்பிடிக்கிறார்கள். ஆசிரியர்களே முகவுரை எழுதுவார்கள்; அல்லது வேறு சிறந்த அறிஞர்கள் எழுதுவதும் உண்டு.

புத்தக வெளியீடு ஒரு கலையாகி விட்ட இந்தக் காலத்தில்தான் முகவுரை எழுதும் வழக்கம் புதிதாக வந்தது என்று நினைக்க இடம் இல்லை. தமிழ் நூல்களைப் பொறுத்த வரையில் இந்த வழக்கம் மிகப் பழையதென்றே சொல்ல வேண்டும். 'முகவுரை இல்லாத புத்தகம் முகம் இல்லாத உடம்புக்குச் சமானம்' என்று தமிழர் எண்ணினர். மாட மாளிகைகளுக்குச் சித்திரங்கள் எவ்வளவு அவசியமோ, கோயிலுக்குக் கோபுரம் எவ்வளவு அவசியமோ, மட மங்கையருக்கு ஆபரணம் எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் நூலுக்கு முகவுரை. முகவுரையின் இலக்கணத்தைப் பற்றியும் இலக்கண நூல்கள் சொல்லுகின்றன.

முகவுரை, நூலுக்கு முகத்தைப் போன்றது; நூலையும் நூலாசிரியரையும் அறிமுகப்படுத்துவது. இன்ன தகுதியுடையவர்களே குறிப்பிட்ட நூலைப் படிக்கவேண்டும் என்று கூறுவது.

நூலாசிரியன் தன் பெருமையைத் தானே சொல்லிக்கொள்ளலாமா? அது தற்புகழ்ச்சியாகி விடுமே. ஆகையால் நூலாசிரியனை நன்கு தெரிந்தவரே முகவுரை எழுதுவது சிறப்பென்று பழைய இலக்கணம் சொல்லுகிறது. 'ஆயிர வகையினால் அழகிய நூல் ஒன்றை ஒரு புலவன் இயற்றினாலும் பிற அறிஞன் அந்நூலுக்கு ஒரு முகவுரை எழுதி அறிமுகப் படுத்தாவிட்டால் அது நூலாகாது' என்று ஒரு சூத்திரம் அறிவிக்கிறது.

**'ஆயிர முகத்தான் அகன்றது ஆயினும்**
**பாயிரம் இல்லது பனுவல் அன்றே!'**

பிறர் எழுதும் இந்த முகவுரைக்குச் சிறப்புப் பாயிரம் என்று பெயர். நூலாசிரியனைப்பற்றியும், அவனுடைய தகுதியைப்பற்றியும், நூலின் சிறப்பு, பொருள், அதனை இயற்ற நேர்ந்த காரணம் இவற்றைப் பற்றியும் உள்ள செய்திகளை முகவுரை புலப்படுத்த வேண்டும். ஆனால் பிற்காலத்தில் எழுந்த சிறப்புப் பாயிரங்களெல்லாம், படிப்பவர்களுக்கு வேண்டிய செய்திகளைத் தெரிவிக்காமல், ஆசிரியனை வானளாவப் புகழும் துதிமாலைகள் ஆகிவிட்டன. பல சிறப்புப் பாயிரங்களில் நூல்களில் இன்ன விஷயம் உள்ள தென்பதே சொல்லப் பெறுவதில்லை. இந்தக் காலத்துப் பத்திரிகைகளில் வரும் மதிப்புரைகளைப் போலச் சிறப் புப்பாயிரங்கள் எழுந்தன.

தொல்காப்பியத்துக்கு ஒரு முகவுரை—சிறப்புப் பாயிரம்—இருக்கிறது. அது முகவுரையின் லட்சணங் கள் அமைந்தது. தொல்காப்பியருடைய தோழராகிய

பனம்பாரனுர் என்னும் புலவர் இயற்றியது அது; அந்தக் காலத்து வழக்கப்படி பாட்டாகவே இருக்கிறது. அந்த முகவுரையிலிருந்து தமிழ் மொழியின் சரித்திரத்திற்குப் பயன்படும் செய்திகள் சில வெளியாகின்றன.

பழங்காலத்தில் பாரதநாடு முழுவதும் உள்ளப் பண்பிஞல் ஒன்றியிருந்தாலும், நாட்டுப்பிரிவுகள் பாஷை காரணமாக அமைந்திருந்தன. ஒவ்வொரு பாஷையைப் பேசும் நிலப்பகுதியினரும் தனி நாட்டினராகப் பிரிந்து நின்றனர். ஒழுக்கம், தெய்வங் கொள்கை, உறுதிப்பொருள் முதலிய விஷயங்களில் இமய முதல் குமரி வரையில் ஒருமைப்பாடு இருந்தது. ஆனல் உடை, உணவு, பாஷை என்பவற்றில் வேற்றுமை உண்டு.

மொழி வேற்றுமையால் உண்டான நாட்டுப் பிரிவின்படி, நாம் வாழும் நாடு தமிழ்நாடு ஆயிற்று. இதனைப் பனம்பாரனுர் 'தமிழ் கூறும் நல்லுலகம்' என்று சொல்லுகிருர். இதன் எல்லை என்ன? வடக்கே திருவேங்கட மலையும் தெற்கே குமரியாறும் கிழக்கு, மேற்கு இரண்டு திக்கிலும் கடல்களும் ஆக அமைந்த நிலப்பரப்பே தொல்காப்பியர் காலத்துத் தமிழ் நாடு. பனம்பாரனுர் கிழக்கும் மேற்கும் உள்ள எல்லைகளை அவசியம் இல்லையென்று கூறவில்லை. தமிழ் நாட்டுக்குப் புறம்பே அந்தத் திசைகளில் மக்கள் வாழும் நாடு இல்லை; கடல்களே உள்ளன. இமாலயத்துக்கு வடக்கும், குமரியாற்றுக்குத் தெற்கும் மக்கள் வாழ்ந்தனர். ஆதலின் அந்தத் திசைகளில் எல்லையை வரையறுத்துச் சொல்லவேண்டியது அவசியமாயிற்று.

தமிழ் பேசும் நாட்டில் வழங்கும் இலக்கண நூல் தொல்காப்பியம். எதற்கு இலக்கணம்? தமிழ் மொழிக்கு. தமிழ்மொழி என்பது எங்கே எந்த உருவத்தில் இருக்கிறது? 'நூல் உருவத்தில் இருப்பது தான் தமிழ்; மக்கள் பேசுவது இலக்கியம் ஆகாது' என்ற கட்சி ஒன்று இன்றும் இருக்கிறது. இலக்கணம் என்பது இலக்கியத்தின் இயல்பைச் சொல்வது. தொல் காப்பியர் எவற்றை இலக்கியமென்று நினைத்தார்? புலவர்கள் இயற்றிய நூல்களை மாத்திரம் இலக்கிய மென்று எண்ணி, அவற்றில் உள்ள மரபுகளை இலக் கணமாக அமைத்தால், அந்த நூல் தமிழ் மொழிக்கு இலக்கணமென்று சொல்வது பொருந்தாது.

தொல்காப்பியர் இலக்கணம் செய்வதற்கு முந்திப் பெரிய ஆராய்ச்சி ஒன்றைச் செய்தார். தமிழ் மக்க ளிடத்தில் உயிரோடு உலவுவது தமிழ்மொழி. அந்தப் பேச்சு வழக்கைத்தான் அவர் முதலிலே கவனித்தார். பிறகு நூல்களை ஆராய்ந்தார். அவருக்கு முன் இருந்த இலக்கணங்களையும் ஆராய்ச்சி செய்தார். எல்லா வற்றையும் நிதானமாக ஆராய்ந்த பிறகு அவசியம் தமிழ் மொழிக்குப் புதிய முறையில் ஓர் இலக்கணம் வகுக்கவேண்டும் என்ற உறுதியைக் கொண்டார்.

'வடக்கே வேங்கடத்தையும் தெற்கே குமரியாற் றையும் எல்லையாகக் கொண்டு இவற்றினிடையே உள்ள தமிழ் பேசும் நாட்டில் பேச்சுவழக்கும் நூல் வழக்குமாகிய இரண்டு மூலப்பொருள்களிலும் உள்ள எழுத்து, சொல், பொருள் என்பவற்றை ஆராய்ந்து, செந்தமிழ் நாட்டில் முன்பே உள்ள இலக்கண நூல்களையும் உணர்ந்து, எல்லாவற்றிலும் அமைந்த

செய்திகளை முறையாகச் சிந்தித்து, குற்றமற்ற இந்த நூலில் தான் கண்ட இலக்கணங்களை யெல்லாம் தொகுத்துச் சொன்னான்.'

இது பனம்பாரனார் இயற்றிய சிறப்புப் பாயிரத்தின் முற்பகுதி.

> ' வடவேங்கடம் தென்குமரி
> ஆயிடைத்
> தமிழ்கூறும் நல்லுலகத்து
> வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
> எழுத்தும் சொல்லும் பொருளும் நாடிச்
> செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
> முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
> புலந்தொகுத் தோனே. போக்கறு பனுவல்.'

இந்தப் பகுதியினால் இலக்கணத்தின் சொரூபம் இன்ன தென்பது நன்றாக விளங்கும். தொல்காப்பியர் இலக்கணத்தை இயற்றவில்லை; புதிதாகச் சிருஷ்டி செய்யவில்லை. தமிழுலகத்தில் உயிரோடு உலாவிய தமிழினூடே ஒளிரும் அழகுகளைக் கூர்ந்து பார்த்தார். அந்த அழகுகளையெல்லாம் ஒருசேரத் தொகுத்து முறையாக வகுத்தார். அப்படித் தொகுத்தும் வகுத்தும் அமைத்ததுதான் தொல்காப்பியம். அந்த நூலில் உள்ள சொல்லமைப்பு மாத்திரம் தொல்காப்பியருக்கு உரியது. அதனுள் சொல்லப்பட்ட செய்திகள் முன்பே இருந்தன.

'கடல் நீலநிறம்' என்று ஒருவன் எழுதுகிறான். அவன் கடலையும் உண்டாக்கவில்லை; நீல நிறத்தையும் உண்டாக்கவில்லை. புதிதாகக் கடலில் உள்ள நீல நிறத்தை நமக்குக் காட்டவில்லை. நாம் தினந்தோறும்

பார்த்து இன்புற்றுவரும் கடலில், நீரும் நீலநிறமும் கலந்திருப்பதை நமக்குப் புலப்படுத்துகிறுன். அவ்வளவுதான். அதுபோலத் தமிழ்மொழியின் இயல்புகளைத் தாம் அறிந்து அவற்றை முறைப்படுத்தி நமக்குச் சொல்கிறுர் தொல்காப்பியர்.

உலகவழக்குக்கும் இலக்கணம் தொல்காப்பியத்தில் இருக்கிறது என்பது ஒரு முக்கியமான செய்தி. எழுதப்படும் பாஷைக்குத்தான் இலக்கணம் உண்டு என்ற தப்பான கருத்தை இது போக்குகின்றது. தொல்காப்பியருக்கு முன்னும் இலக்கியங்கள் இருந்தன என்ற செய்தியும் பனம்பாரனுர் வாக்கால் விளங்குகிறது.

சிறப்புப்பாயிரத்தின் பிற்பகுதி தொல்காப்பியரைப்பற்றிய வரலாற்றைச் சொல்கிறது. நிலந்தரு திருவிற் பாண்டியனுடைய அவைக்களத்தில் இந்த நூல் அரங்கேற்றப்பட்டது. தர்ம சாஸ்திரங்களையும் வேதங்களையும் நன்கு உணர்ந்த அதங்கோட்டாசான் என்னும் பெரியார் தலைமையில் அவர் கேட்கும் கேள்விகளுக்கெல்லாம் விடைகூறித் தொல்காப்பியர் தம் நூலை அரங்கேற்றினுர். எழுத்து முதலிய மூன்று இலக்கணங்களையும் வகைப்படுத்தித் தெளிவாக்கினுர். 'ஐந்திர இலக்கண அறிவு நிறைந்த தொல்காப்பியன்' என்று உலகம் போற்றும் புகழையும் தவவிரதத்தையும் உடையவர் தொல்காப்பியர்.

**'நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து**
**அறங்கரை நாவின் நான்மறை முற்றிய**
**அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து**
**மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி**

**மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த**
**தொல்காப் பியன்எனத் தன்பெயர் தோற்றிப்**
**பல்புகழ் நிறுத்த படிமை யோனே.'**

*[நிலம் தரு—பிறநாட்டைக் கைக்கொள்ளும். கரை—கூறும். முற்றிய—முற்றும் பயின்ற. அரில் தப—குற்றம் நீங்க. தெரிந்து—காட்டி. படிமை—விரதம்.]*

*தொல்காப்பியர் முனிவர். தவம் செய்பவர். அவர் வடமொழியிலும் சிறந்த அறிவுடையவர். அவருக்கு அம்மொழியின் இலக்கண இலக்கியங்களில் உரமான பயிற்சி இருந்தது. முக்கியமாக, இந்திரனால் செய்யப் பெற்றதென்று கருதும் ஐந்திர வியாகரணத்தில் அவர் சிறப்பான ஆராய்ச்சியுடையவர். அந்த வியா கரணத்தில் அமைந்துள்ள முறையைப் பார்த்தபோது தமிழுக்கும் அதைப்போலச் சிறந்த பான்மையில் ஓர் இலக்கணம் செய்யவேண்டுமென்று தோன்றிற்று.*

*'வடமொழி இலக்கணத்துக்கும் தமிழ் இலக் கணத்துக்கும் என்ன சம்பந்தம்?' என்ற சந்தேகம் இங்கே தோன்றக்கூடும். ஓர் அழகான ஆங்கிலப் புத்தகத்தைக் கடையில் ஒரு தமிழ்நூற் பதிப்பாளர் பார்க்கிறார். அதைப் போலவே தமிழ்ப் புத்தகத்தை அச்சிட்டு அட்டைபோட வேண்டுமென்று விரும்பு கிறார். அசல் அதே புத்தகம் என்று தோன்றும்படி யாகச் செய்ய அவரால் முடிகிறது அல்லவா? அங்கே இங்கிலீஷ்ப் புத்தகத்துக்கும் தமிழ்ப் புத்தகத்துக்கும் என்ன சம்பந்தம் என்ற கேள்விக்கு இடமில்லையே! பைண்டு, அட்டைச் சித்திரம், அச்சில் உள்ள சில தந் திரங்கள் இவை.பாஷைக்குப் புறம்பே புத்தக உற்பத் திக் கலையைச் சார்ந்தவை. அவை எல்லாப் பாஷைப்*

புத்தகங்களுக்கும் பொது, அப்படியே பாஷைக்கு இலக்கணம் என்பதும் பொதுவான செய்தி. ஒரு பாஷையின் இலக்கணத்தை இப்படி ஆரம்பித்து இப்படிச் சொல்லவேண்டும் என்று தெரிந்துகொள்வதற்கு, ஐந்திரமானாலும் சரி, ஆங்கில இலக்கணமானாலும் சரி, மிகவும் உபயோகமாக இருக்கும். ஆனால் அது சிறந்த முறையில் அமைந்ததாக இருக்க வேண்டும்.

எழுத்து, சொல், பொருள் என்னும் பகுதிகளுக்குரிய இலக்கணங்கள் கலவையாகப் பழைய இலக்கணங்களில் இருந்தன என்றும், அவற்றை வரையறுத்து ஒழுங்குபடுத்தி, எழுத்துச் சம்பந்தமான செய்திகளை வேருகவும், சொல் இலக்கணத்தை வேருகவும், பொருள் மரபை வேருகவும் தொல்காப்பியர் பிரித்து அமைத்தார் என்றும் தொல்காப்பிய உரையாசிரியர்கள் எழுதியிருக்கிறார்கள். இப்படிப் பிரிக்க வேண்டும் என்ற நினைவு ஐந்திர வியாகாரணத்தைப் படிக்கும்போது தொல்காப்பியருக்குத் தோன்றியிருக்கலாம்.

இவ்வாறு, தொல்காப்பியத்தின் முகவுரையாகிய பனம்பாரனார் இயற்றிய சிறப்புப்பாயிரம், தமிழ்மொழியின் அக்காலத்து நிலையை ஒருவாறு புலப்படுத்தி, தொல்காப்பியர் இலக்கணம் இயற்றிய கதையையும் தெரிவிக்கிறது.

## 11

# எழுத்து விசித்திரம்

ஒரு நாள் என்னுடைய ஆசிரியராகிய மகாமகோ பாத்தியாய ஐயரவர்கள் தம்முடைய ஆராய்ச்சி வேலையில் உடனிருந்து உழைக்கும் ஒரு வித்துவானிடம் சில வார்த்தைகள் எழுதிய கடிதங்களைக் கொடுத்து அவற்றை அகராதி வரிசையாக அடுக்கச் சொன்னார் கள். கடிதங்களைக் கொடுத்து விட்டு, 'எங்கே, அகரம் முதல் எழுத்துக்களை வரிசையாகச் சொல்லுங்கள், பார்ப்போம்' என்று கேட்டார்கள். வித்துவானுக் குத் தூக்கிவாரிப்போட்டது. 'நாம் வித்துவான் பரீட் சையில் தேர்ச்சி பெற்றிருக்கிறோம். தமிழ் அரிச்சுவடி தெரியாமலா இருக்கும்!' என்று கோபம் வந்திருக்க லாம். 'அரிச்சுவடி எப்பொழுதோ படித்தது. இப் போது அந்த வரிசை ஒருவேளை மறந்துபோயிருந்தா லும் இருக்கலாம். அப்படியானால் அகராதி வரிசையில் தவறு வந்துவிடுமே!' என்று ஐயரவர்கள் எண்ணி னார்கள்.

உண்மையில், எத்தனை பேருக்கு ல முந்தியா, ள முந்தியா என்ற விஷயம் மறந்து போயிருக்கும், தெரியுமா? கிரமமாக அ முதல் ன் வரையில் வரிசைப் படி கற்றுக்கொண்டவர்களிடமே இந்தத் தடுமாற்றம் இருந்தால் இந்தக் காலத்துப் பிள்ளைகளுக்கு வரிசையே தெரியாமல் இருப்பது ஆச்சரியம் அல்ல.

இப்பொழுது பாடம் அகரத்திலிருந்து ஆரம்பம் ஆவதில்லையே! பட பட டப டப என்றுதானே ஆரம்பிக்கிறார்கள்? இந்த மாதிரி படிக்கும் பிள்ளைகளைப் பார்க்கும்போது அ கரம் முதல் எழுத்து, ன் கடைசி எழுத்து என்று சொல்ல வேண்டியது அவசியம் என்று தோற்றுகிறது.

தொல்காப்பியத்தில் ஆரம்பச் சூத்திரம் இதைத் தான் சொல்கிறது. இலங்கணம் பாஷையின் சட்டம். தெரியாததைச் சொல்லிவிட்டுத் தெரிந்தவை தாமே என்று சிலவற்றை விடுவது சட்டத்தில் இல்லை. தொல்காப்பியர் முதல் சூத்திரத்தில், 'அ என்பது முதல் ன் என்பது வரையில் உள்ள முப்பதும் எழுத்து என்று சொல்லப்படும்' என்று ஆரம்பிக்கிறார். இந்தக் காலத்தில் அந்த வரிசையை அறிவுறுத்துவது மிகவும் அவசியம் அல்லவா?

* * *

எழுத்துக்களில் இரண்டு வகை உண்டு. அ என்பது முதல் ஔ என்பது வரையில் உள்ளவற்றை உயிர் எழுத்துக்கள் என்று சொல்லுவார்கள். க் முதல் ன் வரையில் உள்ள பதினெட்டையும் மெய் எழுத்துக்கள் என்று சொல்லுவார்கள். உயிரும் உடலும் சேர்ந்த மனிதர்களைப் போலத் தமிழ் எழுத்துக்கள் உலகில் வழங்குகின்றன. உடம்புக்குள் புகுந்துகொண்டு உயிர் அதை ஆட்டிவைக்கிறது. அப்படிப்போல் உயிரெழுத்துக்கள் இருக்கின்றனவாம்.

தமிழ் எழுத்துக்களின் சரித்திரமும் இலக்கணமும் மிக்க விசித்திரமானவை. மூன்று சுழிகளைப் போட்டு

'அக்கன்ஞ' என்று சொல்லி எழுதுகிறோமே, அதற்கு **ஆய்தம்** என்ற பெயரை இலக்கணக்காரர்கள் கொடுத்திருக்கிறார்கள் அடுப்புக்கல் மாதிரி இருக்கிறது அந்த எழுத்து. அம்மாதிரி ஓர் ஆயுதம் பழைய காலத்தில் இருந்ததாம். அதனால்தான் அந்த எழுத்துக்கு ஆய்தம் என்ற பெயர் வந்ததாம்.

நம் வீட்டில் ஒரு குழந்தை பாலர் வகுப்பில் படிக்கிறது. எழுத்துக்களைக் கூட்டிப் படிக்கும் பருவத்தில் இருக்கிறது. 'மூ, க், கு, மூக்கு' என்று படிக்கிறது. படிக்கும்போது அந்தக் 'கு' வைக் கொஞ்சம் நீட்டிச் சொல்கிறது. 'சங்கு' என்று படித்தால் கு என்ற எழுத்தைப் பரிபூரணமாக உச்சரிக்கிறது. ஆனால் சாதாரணமாக அது பேசும் போதோ, சங்கு, மூக்கு என்ற வார்த்தைகள் வந்தால் அப்பொழுது கவனித்துப் பாருங்கள்; நாம் பேசுவது போலத்தான் இருக்கும். சங்கு என்ற வார்த்தையில் உகரத்தை நாம் பூரணமாக உச்சரிப்பதில்லை. அதைக் குழந்தை படிக்கும்போது, கண்ணால் பார்க்கும் எழுத்தை மாத்திரம் உச்சரிக்கிறதே ஒழிய, நாம் எப்படிப் பேசுகிறோம் என்பதைக் கவனிப்பதில்லை.

ஆகவே குழந்தை 'சங்கு' என்று படிக்கும்போது 'கு' என்ற எழுத்தின் உச்சரிப்பு ஒரு விதமாகவும், பேசும்போது வேறு விதமாகவும் இருக்கிறது. பேசும்போது உகரத்தைத் தொட்டும் தொடாமலும் விட்டு விடுகிறது. அதாவது உ என்ற ஓசை முழுவதும் அங்கே வராமல் குறைகிறது; குறைந்த இயல்போடு அந்த உ நிற்கிறது. அதற்குக் **குற்றியலுகரம்** என்று தமிழர்கள் பெயர் வைத்திருக்கிறார்கள். குறுகிய

இயல்பை உடைய உ என்ற எழுத்து என்பது அப் பெயரின் பொருள்,

குழந்தை படிக்கும்போது குற்றியலுகரத்தைத் தெரிந்துகொள்ளத் தனியே அடையாளம் இல்லாமை யால், அது அதனைப் பூரணமாக உச்சரித்துவிடுகிறது. பழைய காலத்தில் குற்றியலுகரத்தைக் கண்ணுல் பார்த்தாலே தெரிந்துகொள்ளும்படி அதன் தலையில் ஒரு புள்ளி வைத்து வந்தார்கள், ஓசை குறைவாக இருக்கும் எழுத்துக்களுக்குப் புள்ளி அடையாளம் இடுவது தமிழில் வழக்கம். க என்பதைவிட க் என்பது ஓசை குறைந்தது; அரை மாத்திரை குறைந்தது என்று இலக்கணப்படி கணக்கெடுத்திருக்கிறுர்கள். க என்ற எழுத்தைவிடக் குறைந்தமையால் அதன் தலையில் ஒரு புள்ளியிட்டு க் என்று எழுதுகிறோம். இப்படித் தான் சங்கு என்று எழுதும்போது கடைசி எழுத்தின் தலையில் ஒரு புள்ளிவைத்து எழுதுவது பழைய வழக்கம். இந்தமாதிரி ஓசை குறைந்த இகரம் ஒன்று உண்டு. அதற்குக் **குற்றியலிகரம்** என்று பெயர். அதன் தலையிலும் புள்ளி போடுவார்கள்.

ஒருவர் கதை சொல்லிக்கொண்டு வருகிறுர். நாம் 'ஹூம்' கூட்டுகிறோம். அந்த ஒலியை 'ஹூம்' என்று எழுதுகிறோம். ஆனல் அதில் உள்ள ம் என்ற எழுத் தைப் பூரணமாக உச்சரிப்பதில்லை. அந்த ஒலி மூக்கி லேயே நின்றுவிடுகிறது, ஹிந்தி பாஷையிலும் ஸம்ஸ் கிருதத்திலும் அதை எழுதிக் காட்ட முடியும். தமிழில் எழுதிக்காட்டப் பழைய காலத்தில் ஒரு வழியைச் சொல்லியிருக்கிறுர்கள். ஓசை குறைந்த எழுத்துக்குத் தலையின்மேல் புள்ளி வைப்பது வழக்கம் என்று

தெரிந்துகொண்டோமல்லவா? இநத 'ஹூம்' என்ற ஒலியிலுள்ள ம் முன்பே ஒரு புள்ளியைப் பெற்றிருக் கிறது. அது பின்னும் குறைந்தால் மற்றொரு தலைப் புள்ளியைப் போடுவதா? போட்டால் எழுதும் வேகத் தில் இரண்டு புள்ளிகளும் ஒன்ருகப் போய்விடுமே! அதற்கு ஒரு தந்திரம் செய்தார்கள். 'தலையிலே ஒரு புள்ளி இருக்கட்டும்; அதன் வயிற்றிலே ஒரு புள்ளி போடுங்கள்' என்ருர்கள். ம் என்ற எழுத்தில் சுழி போன்றுள்ள பகுதிக்கு நடுவே ஒரு புள்ளி போட்டு அதை **மகரக் குறுக்கம்** என்ற பெயரால் குறித்தார்கள்.

'**உட்பெறு புள்ளி உருவா கும்மே**' என்று தொல்காப் பியர் அதை வருணிக்கிருர். 'தலையிலே பெற்ற புள்ளி யோடு உள்ளேயும் ஒரு புள்ளியைப் பெறுதல் அந்த மகரக் குறுக்கத்தின் உருவமாகும்' என்பது இதன் பொருள்.

*   *   *   *

மெய்யெழுத்துக்களுக்கும் குறுகிய எழுத்துக் களுக்கும் புள்ளி போடுவதோடு உயிரெழுத்துக்களி லும் இரண்டெழுத்துக்களுக்குத் தலைப்புள்ளி பழைய காலத்தில் இருந்து வந்தது.

**எ, கெ, ஒ, கொ** என்று எழுதிஞல் பழைய காலத் தில் **ஏ, கே, ஓ, கோ** என்றுதான் படிப்பார்கள். அவற் றின்மேலே புள்ளி வைத்தால்தான் இப்போது நாம் படிப்பதுபோலக் குற்றெழுத்துக்களாகப் படிப்பார்கள். **ஏ** யில் கீழே சாய்வாக இழுக்கும் கோடும், **கே** யில் உள்ள இரண்டு சுழிகளையுடைய கொம்பும் **ஓ** வில் உள்ள கீழ்ச்சுழியும், **கோ**வில் உள்ள கொம்பின் தலைச்

சுழியும் பிற்காலத்தில் வந்தவை. ஏட்டுச் சுவடிகளில் உள்ள எழுத்துக்களில் ஒன்றுக்காவது புள்ளியே இராது. எழுத்தாணியால் குத்தினால் ஓலை ஓட்டையாகி விடுமென்று எண்ணினார்களோ என்னவோ, மெய் யெழுத்தானாலும் சரி, வேறு எழுத்தானாலும் சரி, புள்ளியே போடுவதில்லை. 'கேட்கவேணும்' என்பதை 'கெடகவெணும' என்று எழுதியிருப்பார்கள். இப் போது நாம் புள்ளிகளை விட்டு எழுதுவதில்லை. மிகப் பழைய காலத்திலும் புள்ளியை விடாமல் எழுதி வந்திருக்க வேண்டும்.

எ, ஒ என்னும் இரண்டையும் புள்ளி பெற்றால் குறிலாகவும், புள்ளி பெறாவிட்டால் நெடிலாகவும் உச்சரிக்கும் வழக்கம் முன்பு இருந்தது. நாளடைவில் புள்ளியிடுவதை மறந்தபோது எகர ஏகாரங்களுக்கும் ஒகர ஓகாரங்களுக்கும் வித்தியாசம் தெரியவில்லை. இந்தச் சங்கடத்தை அறிந்த ஒரு வெள்ளைக்காரர் எழுத்தை மாற்றினார். ஏ யிலுள்ள கீழ்க்கோடும், கே, கோ என்பவற்றின் கொம்பிலுள்ள தலைச்சுழியும், ஓவிலுள்ள கீழ்ச்சுழியும் அவர் சிருஷ்டிகள். அந்த விசுவாமித்திரர் யார் தெரியுமா? சில நூற்றாண்டுக ளுக்குமுன் இத்தாலி தேசத்திலிருந்து தமிழ் நாட்டுக்கு வந்து தமிழைக் கற்றுப் பெரும் புலவராகி விளங்கிய பாதிரியார் அவர். அவருடைய இயல்பான பெயர் பெஷி என்பது. இங்கே வந்தபிறகு, வீரமாமுனிவர் என்றும், தைரியநாதசுவாமி என்றும் பெயர் பெற்றார். ஏ, ஓ, ே என்ற எழுத்துக்கள் மூன்றையும் அவர் உண்டாக் கினார். தமிழர்களும் அவற்றை ஒப்புக்கொண்டார்கள்.

* * * *

பழங்காலத்தில் எகர ஒகரங்களும் மெய்களும் குற்றியலுகரமும் குற்றியலிகரமும் மகரக்குறுக்கமும் புள்ளியிட்ட எழுத்துக்களாக விளங்கின அதிசயத்தைத் தொல்காப்பியத்திலிருந்து அறிகிறோம். கரும் புள்ளி (Black Mark) வைப்பது என்றால், மதிப்புக் குறைவு என்று பொருள் செய்வது இக்காலத்து வழக்கு; புள்ளி வைத்தால் ஓசைக் குறைவுக்கு அடையாளம் என்பது தமிழில் பழைய காலத்து வழக்கு. இது விசித்திரமான ஒற்றுமையாகத் தோற்ற வில்லையா?

இலக்கணத்தின் மூலமாக இன்ன இன்ன எழுத்துக்கள் புள்ளிபெறுமென்று தெரிந்துகொள்வதோடு இலக்கியங்களிலிருந்தும் இந்தச் செய்தியைத் தெரிந்து கொள்ள முடிகிறது. புள்ளியுள்ள எழுத்துக்களை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு சமற்காரமாகச் சில புலவர்கள் சில பாடல்களைப் பாடியிருக்கிறார்கள்.

ஓதி யென்பதற்குக் கூந்தல் என்னும் பொருள் உண்டு. ஓ என்ற எழுத்து, பழைய காலத்தில் ஒ என்றே இருந்தது அல்லவா? அதன்மேல் ஒரு புள்ளி யிட்டால் முன் சொன்ன சொல்லை ஒதி என்று படிக்க வேண்டும். அது ஒரு மரத்தின் பெயர். 'மயிரை வைத்து அதற்கு ஒரு புள்ளியிட்டால் மரமாகும்' என்று விடுகதையைப்போல ஒரு புலவர் சொல்கிறார்.

'மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின்
செயிர்தீர் மரமாகும் சென்று'.

இந்த விடுகதையோடு மற்றொன்றையும் சேர்த்தார் ஒரு புலவர். ஏரி என்பது பழைய உருவத்தில் புள்ளி

பெற்ருல் எரி என்ருகும். நீர்நிலை புள்ளி பெற்ருல் நெருப்பாகிவிடும் என்று சமற்காரமாகச் சொல்கிருர்.

> 'நேரிழையார் கூந்தலினேர் புள்ளிபெற நீண்மரமாம்
> நீர்நிலையோர் புள்ளி பெறநெருப்பாம்'.

[நேரிழையார்—பெண்கள்.]

புள்ளிக்கு வடமொழியில் பிந்து என்று பெயர். புள்ளியிட்ட எழுத்துக்களே வரும்படி பாடுவது ஒரு சாதுரியம். அந்த விசித்திரத்தைப் 'பிந்துமதி' என்று சொல்வார்கள்.

> 'நெய்கொண்டெ னெட்கொண்டெ னெற்கொண்
> டென் கொட்கொண்டென்
> செய்கொண்டென் செம்பொன்கொண் டென்'

என்ற பாடலைப் பிந்துமதிக்கு உதாரணமாக யாப்பருங் கலம் என்ற நூலின் உரையாசிரியர் காட்டியிருக்கிருர். இந்தப் பாட்டில் மெய்களும், எகரங்களும் ஒகரங்களு மே வந்திருக்கின்றன. பழைய வழக்கப்படி இவையெல் லாம் புள்ளியிட்டு எழுதும் எழுத்துக்களே; ஆதலால் இது பிந்துமதி ஆயிற்று.

# 12

# எழுத்து வரிசை

எழுத்துக்களை அ, ஆ, இ, ஈ, என்ற வரிசைப்படி அமைத்திருக்கிறார்களே, அதற்கு ஏதாவது காரணம் உண்டா என்பதை ஆராய வேண்டும். திரு வள்ளுவர் திருக்குறளில் முதற்பாட்டிலேயே 'அகர முதல எழுத்தெல்லாம்' என்று ஆரம்பிக்கின்றார். 'எல்லா வகையான எழுத்துக்களுக்கும் அ என்ற எழுத்தே முதல்' என்று அவர் சொல்கிறார். இந்திய பாஷைகளில் எல்லாம் அகரமே முதலாக இருக்கிறது. அ என்ற எழுத்துக்குப் பிறகு ஆ என்பதை வைப் பானேன்? க என்பதற்குப் பிறகு ங இருப்பதற்குக் காரணம் என்ன? இத்தகைய கேள்விகளுக்கு இலக் கண நூல்கள் விடை சொல்லுகின்றன.

தொல்காப்பியத்தில் எழுத்தின் இலக்கணத்தைப் பற்றிக் கூறும் முதல் பகுதியில் ஒரு பிரிவுக்குப் **பிறப் பியல்** என்று பெயர். எழுத்துக்கள் எப்படிப் பிறக் கின்றன என்பதைச் சொல்லும் பிரிவு அது. எழுத் தின் ஒலியைப்பற்றி ஆராயும் சாஸ்திரத்தைப் 'போன டிக்ஸ்' (Phonetics) என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். அந்தச் சாஸ்திரத்திலுள்ள பல செய்திகளைத் தொல் காப்பியம் பிறப்பியலில் கூறுகிறது.

எழுத்தை நாம் எப்படி உச்சரிக்கிறோம்? அதற்கு எந்த எந்த உறுப்புக்கள் அவசியம்? இந்த விஷயங்

களையே பிறப்பியல் சொல்லுகிறது. 'பல்லுப் போனால் சொல்லுப் போச்சு' என்று தமிழில் ஒரு பழமொழி உண்டு. மந்திரங்களை உச்சரித்துப் பயன் பெறுபவர் களுடைய சக்தி, பல் விழுந்துவிட்டால் குறைந்துவிடும் என்று சொல்வார்கள். இதற்குக் காரணம், எழுத்துக் களைச் சரிவர உச்சரிப்பதற்குப் பல்லும் அவசியமான கருவியாக இருப்பதுதான்.

நாம் பேச ஆரம்பிக்கும்பொழுது நம்முடைய உடலில் ஒரு பெரிய சங்கீதக் கச்சேரி ஆரம்பமாகிறது. பேசுவதையே சங்கீதமாக வைத்துக்கொள்ளலாமே. இந்த உடம்பைச் சாரீர வீணை என்று சொல்வது ஒரு வழக்கம். சங்கீதம் ஆரம்பிப்பதற்கு முன்பு சுருதி போட வேண்டும். இங்கே எழுத்துக்களை உச்சரிப்ப தற்கு முன்பு சுருதி நம்முடைய நாபியில் ஆரம்பமாகிற தாம். அங்கிருந்து காற்று எழுகிறது. அந்தக் காற்றுக்கு உதானன் என்று பெயர் வைத்திருக்கிறார்கள். அந்தக் காற்று மேலெழுந்து வருகின்றது. அது மார் பிலே சிறிது நின்று பிறகு வாய் வழியாகப் புறப்படு கிறது; சில சமயங்களில் கழுத்தளவும் வந்து அங்கே தங்கியும் புறப்படும்; மூக்கிலே தங்கியும் தலையிலே தங்கியும் புறப்படுவதுண்டு. கடைசியாக வாய் வழி யாகப் புறப்படும்போதுதான் பல பல முயற்சிகள் நடைபெறுகின்றன. சங்கீதக் கச்சேரியில் பக்க வாத்தி யங்களும் பிரதானமான பாடகரும் இருப்பது போல நாக்காகிய பாடகருக்குப் பல், மேல் வாய், இதழ் முதலிய உறுப்புக்கள் உதவி புரிகின்றன.

இவ்வாறு நாபியிலிருந்து வரும் காற்று எங்கே தங்குகிறதோ அந்த இட வேறுபாட்டாலும், நாக்கு

எந்த எந்தக் கருவிகளோடு எப்படி எப்படிப் பொருந்து கிறதோ அந்த வேறுபாட்டாலும் எழுத்தின் ஒலி பல வகையாக ஏற்படுகிறது. அ என்ற எழுத்து, நாபியி லிருந்து எழுந்த காற்று யாதொரு தடையும் இன்றி வெளியேறுவதால், வாயைத் திறந்தவுடன் இயற்கை யாக ஒலிக்கின்றது. நாக்குக்கு அங்கே வேலை இல்லை. கீழ் வாய் மாத்திரம் கீழே போய் வாயைத் திறந்து ஒலியை வெளிவிடுகிறது. வாயைத் திறந்த மாத்திரத் திலே இயற்கையாகப் பிறப்பதனால்தான் அகரத்தை முதலில் வைத்தார்கள். திறந்த வாயைச் சிறிது அதிக மாகத் திறந்தால் ஆ என்ற எழுத்து உதயமாகிறது. அதன் பிறகு, நாக்கு, பல் முதலிய கருவிகளின் சம்பந் தத்தால் மற்ற எழுத்துக்கள் பிறக்கின்றன.

உதடுகளின் முயற்சியால் உ, ஊ, ஒ, ஓ, ஔ என்ற எழுத்துக்கள் உண்டாகின்றன. ப, ம, வ என்ற எழுத் துக்களுக்கும் உதட்டின் உதவி அவசியம். இரண்டு உதடுகளையும் கைகளால் பிடித்துக்கொண்டால் பல எழுத்துக்களை உச்சரிக்க முடியாது. ஆனால் தமிழில் சில ஒலிகள் இருக்கின்றன. இரண்டு உதடுகளையும் கட்டிவிட்டு, அவை அசையாமல் இருக்கும்படி செய் தாலும் அந்த ஒலிகளை வாசிக்கலாம். இது மிகவும் ஆச்சரியமாகத் தோன்றுகிறதல்லவா? எழுத்துக்களை உச்சரிக்கும் முறை இப்படி என்று நன்றாகத் தெரிந்து கொண்டவர்களுக்கு, உதடு ஒட்டாமல் பேசுவது எப்படி என்ற தந்திரம் தெரியவரும்.

சாதாரணப் பேச்சில், விடுகதை சொல்லுபவர்கள் கூட இந்தத் தந்திரத்தைத் தெரிந்துகொண் டிருக்கிறார் கள். 'அண்ணனுக்கு எட்டாது தம்பிக்கு எட்டும்'

என்ற விடுகதையை நீங்கள் கேட்டிருக்கலாம். அதற்கு விடை உதடுகள் என்பது. மேலுதடு அண்ணனும்; கீழுதடு தம்பியாம். நாம் பேசும்போது மேலுதடு கீழு தட்டைத் தொடுவதில்லை. கீழுதடுதான் மேலு தட்டைத் தொடும். இதைத்தான் அண்ணனுக்கு எட்டாது தம்பிக்கு எட்டும் என்று வேடிக்கையாக அமைத்தார்கள். இந்த அர்த்தத்தைக் காட்டிலும் மிகவும் நுட்பமான அர்த்தம் வேறு ஒன்று இந்த விடுகதைக்கு உண்டு. அண்ணன் என்று சொன்னால் உதடுகள் சேரவேண்டாம்; தம்பி என்றால் பின் இரண்டு எழுத்துக்களுக்கும் உதடு சேர்வது அவசியம். ஆகவே அண்ணன் என்ற வார்த்தைக்குச் சேராமலும் தம்பி என்ற வார்த்தைக்குச் சேர்ந்தும் வருவது என்ற பொருளும் இந்த விடுகதைக்கு உண்டு.

**உ, ஊ, ஒ, ஓ, ஔ, ப, ம, வ** என்ற எட்டு எழுத்துக்களையும் சொல்லாமல் நீக்கிவிட்டு, மற்ற எழுத்துக்களை மாத்திரம் கொண்டு பேசினால் உதட்டுக்கு ஓய்வு கொடுத்துவிடலாம். இந்த எட்டு எழுத்துக்களும் இல்லாமலே சில புலவர்கள் பாட்டுப் பாடியிருக்கிறார்கள். அதற்கு '**நிரோஷ்டகம்**' என்று பெயர். சிவப்பிரகாச முனிவர் என்ற புலவர் திருச்செந்தூரிலுள்ள முருகனை முப்பது பாட்டுக்களால் துதித்திருக்கிறார். 'உதடு ஒட்டாமல் பாடுகிறேன்' என்று வேண்டிக் கொண்டாரோ, என்னவோ! முப்பது பாட்டும் நிரோட்டகம்: உதடு ஒட்டாமல் பாடக்கூடியவை. அந்தத் தோத்திர நூலுக்கு, **திருச்செந்தில் நிரோட்டக யமக அந்தாதி** என்று பெயர். நிரோட்டக அந்தாதியை **இதழகல் அந்தாதி** என்று தமிழில் சொல்வது வழக்கம்.

சங்கீதத்தில் ஏழு ஸ்வரங்கள் வைத்திருக்கிறார்கள். வாத்தியத்தில் ஒவ்வொரு ஸ்வரத்துக்கும் ஒவ்வொரு ஸ்தானம் உண்டு. ஒவ்வொரு ஸ்வரமாக ஓசை ஏறிக்கொண்டே வரும். சரிகமபதநி என்ற முறை அந்த ஒலியை நோக்கி வரிசைப்படுத்தியதாகும். கங, சஞ, டண, தந, பம என்ற எழுத்துக்களும் அந்த மாதிரி ஒரு வகையாக வரிசைப்படுத்தியவைகளே. நம்முடைய வாயாகிய வாத்தியக் கருவியில் நாக்கு வாசிக்கிறது. வான வளையத்தைப் போல வளைந்திருக்கிற மேல் வாயில் ஒவ்வோர் இடமாகத் தொடுகிறது. அப்படித் தொடும்போது உள் வாயிலிருந்து இதழ் வரையில் வரிசையாக வந்தால் கங முதலிய எழுத்துக்கள் பிறக்கின்றன. உள்வாயை அடிநாக்குத் தொடும்போது க, ங என்ற இரண்டு சப்தங்களும் பிறக்கின்றன. க என்ற ஒலி எழும்போது காற்று, கீழிருந்து வருகிறது; ங என்ற ஒலிக்கு மூக்கிலிருந்து வருகிறது. ஆகவே, அந்த ஸ்தானத்தில் இரண்டு எழுத்துக்கள் உண்டாகின்றன.

ச, ஞ மேல் வாயின் நடுவை, நடு நாக்குத் தொட உண்டாகின்றன; டண வை அதற்கு அடுத்த இடத்தில் நாக்குத் தொட்டு உண்டாக்குகிறது. த, ந இரண்டும் பல்லின் அடியை நாக்கின் நுனி தொடும்போது உண்டாகின்றன. அப்பால் உதடு இரண்டும் ஒட்டும் போது ப, ம பிறக்கின்றன. இப்படி உள்வாயிலிருந்து ஒவ்வொரு ஸ்வர ஸ்தானத்தையும் தொட்டு வரும் விரலைப்போல நாக்கு இயங்குவதால் ஒலி வரும்போது வரிசையாக, க முதலிய எழுத்துக்கள் வருகின்றன. இந்த ஒலி நுட்பத்தைக் கவனித்தே எழுத்துக்களின் வரிசையைத் திட்டம் செய்திருக்கிறார்கள்.

## 13

# எழுத்துக் குடும்பம்

உலகம் முழுவதும் உயிருள்ள பொருள்களும் உயிரில்லாத பொருள்களும் நிரம்பியிருக்கின்றன. உயிர் இல்லாவிட்டால் உடம்பு அசைவதில்லை; வேலை செய்வதில்லை. உடம்பை ஆட்டிவைக்கும் உயிரை ஒரு புலவர் கூத்தன் என்று சொல்கிறார். சிதம்பரத்தில் உள்ள நடராஜப் பெருமானுக்குக் கூத்தன் என்று ஒரு பெயர் உண்டு. 'யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டுவான்' என்று அப் பெருமானைப்பற்றி மாணிக்கவாசகர் சொல்கிறார். அவர் உயிர்களைக் கூத்தாட்டுபவர்; அந்த உயிர் உடம்பைக் கூத்தாட்டுகிறது. ஆகையால்தான் அவருக்கும் உயிருக்கும் கூத்தன் என்ற பெயர் வந்திருக்கிறது.

எழுத்துக்கள் அடங்கிய பிரபஞ்சத்தில் அகரம் முதல் ஔகாரம்வரையில் உள்ள எழுத்துக்களை **உயிரெழுத்துக்கள்** என்று கூறுவார்கள். **க்** முதல் **ன்** வரை உள்ள பதினெட்டையும் **மெய்யெழுத்துக்கள்** என்று சொல்வார்கள். உயிரும் உடம்பும் கூடியிருக்கும் மனிதர், மிருகம் போன்ற எழுத்துக்களும் இருக்கின்றன. உயிரோடு சேர்ந்த அந்த மெய்யெழுத்துக்களை **உயிர் மெய்யெழுத்துக்கள்** என்று வழங்குவார்கள்.

* * *

உயிர் எழுத்துக்களில் குறுகிய ஓசை உடையதைக்

குறில் என்றும், நீண்ட ஓசை உடையதை நெடில் என்றும் வழங்குவது தமிழர் வழக்கம். அ என்பது குறில்; அதை நீட்டி ஆ, என்றால் அது நெடிலாகிவிடுகிறது.

உடம்பைப்போல இருக்கும் மெய்யெழுத்துக்களை ஓசையை நோக்கி மூன்று பிரிவாகப் பிரித்திருக்கிறார்கள். க, ச, ட, த, ப, ற என்பவற்றை உச்சரிக்கும்போது அவை மற்ற எழுத்துக்களை விட அழுத்தமாகவும் பலமாகவும் உள்ள ஓசையாக இருக்கின்றன. வன்மையான ஓசையை உடைய அவற்றை **வல்லினம்** என்று வகுத்தார்கள். மூக்கினாலே சொல்லும் ங, ஞ, ண, ந, ம, ன என்ற எழுத்துக்களை **மெல்லினம்** என்றார்கள்; மற்ற ய, ர, ல, வ, ழ, ள என்ற ஆறையும் **இடையினம்** என்றார்கள்; வன்மையும் ஆகாமல் மென்மையும் ஆகாமல் நடுத்தரமான ஓசை உடையனவாதலால் இந்தப் பெயரை அமைத்தார்கள். உடம்போடு உலவும் பிராணிகளிலும் மனிதர்களிலும் உரம் படைத்த பகுதியை ஆணென்றும், உரமின்றி மென்மையான உடம்புடைய பகுதியைப் பெண்ணென்றும் உலகத்தில் வழங்குகிறோம்; இரண்டும் இல்லாவிட்டால் அலியென்று சொல்லுகிறோம். இந்த மூன்று பிரிவும் தனி உயிருக்கு இல்லை; ஆண் உயிர், பெண் உயிர், அலி உயிர் என்று பிரிக்க முடியாது, உடம்பின் வேறுபாட்டால் உண்டாகும் பேதம் இது. எழுத்துக்களிலும் உடம்பைப்போல உள்ள மெய்யெழுத்துக்களுக்கே இந்த வேறுபாடு உண்டு. வல்லினம் ஆண் சாதியைப் போன்றது; மெல்லினம் பெண்ணினத்தைப் போன்றது; பெண்களை மெல்லியலார் என்று வழங்குவதை நாம் அறிவோம் அல்லவா? இடையினம் அலிகளைப் போன்றது.

உயிர் எழுத்துக்களில் ஒரே ஒலி குட்டையாக இருக்கும்போது குறிலாகவும், நீளும்போது நெடிலாக வும் ஆகிறது. அப்படி ஆகும் ஜோடிகளை ஒன்றுக்கு ஒன்று உறவுள்ளதாக எண்ணலாம்; அதாவது, குட்டையாக இருப்பவன் தம்பி, அவனை விட உயர மாக இருப்பவன் அண்ணன் என்று ஒரே மாதிரியான தோற்றமுடையவர்களைப் பார்த்துத் தெரிந்துகொள் வதுபோல, இந்த உறவை நாம் உணர்ந்துகொள்ள லாம். அ என்ற எழுத்து, தம்பியானால், ஆ என்ற எழுத்து அண்ணன். அண்ணனும் தம்பியும் ஒரு வீட் டைச் சேர்ந்தவர்கள். அந்த மாதிரியே அ என்ற எழுத் தையும் அதன் நீண்ட ஒலியுருவமாகிய ஆ என்ற எழுத் தையும் ஒரு ஜோடி யாக்கி அ வுக்கு ஆ இனம் என்று இலக்கணத்தில் சொல்லியிருக்கிறார்கள். இ ஈ, உ ஊ, எ ஏ, ஒ ஓ என்பவற்றையும் இனமாக வகுத்திருக்கிறார்கள்.

இங்கே ஒரு சங்கடம் வருகிறது. அ என்பதை நீட்டி ஒலித்தால் ஆ என்று வருகிறது. ஆகவே அந்த இரண்டையும் ஒரே இனமாகச் சேர்ப்பது பொருத்த மாக இருக்கிறது. ஐ ஔ என்ற இரண்டு எழுத்துக்கள் இருக்கின்றனவே, அவற்றை எந்த எழுத்துக்களோடு சேர்ப்பது? அவற்றை இனமில்லாமல் ஒரு தாய்க்கு ஒரு பிள்ளையாக நிற்பவர்களைப்போல நினைப்பதா? இதற்கு இலக்கணக்காரர்கள் ஒரு வழி கண்டு பிடித்தார் கள். அண்ணன் தம்பியில்லாமல் வீடும் இல்லாமல் உலவும் மனிதர்களை, உணர்ச்சி ஒத்திருப்பதால் நண்பு பூண்டு தம்முடைய வீட்டிலே வைத்து வளர்ப்பவர் கள் உலகத்தில் இல்லையா? அப்படி அநாதையாக வந்தவர்கள் வளர்ப்புப் பிள்ளைகளாக இருந்தாலும்

மற்றப் பிள்ளைகளோடு சகோதரர்களைப் போல் பழகு வதை நாம் பார்க்கிறோமே. அந்த மாதிரி ஐ, ஔ என்ற எழுத்துக்கள் ஒரு வகையில் தமக்குச் சம்பந்தமுள்ள எழுத்துக்களைத் தம்பிகளாக - இன எழுத்துக்களாகப் பற்றிக்கொண்டன. ஈ என்ற எழுத்தை உச்சரித்து நிறுத்தும்போது இ என்ற ஒலியாக நிற்கிறது. ஐ என்ற எழுத்தை உச்சரித்துப் பாருங்கள் ; கடைசியில் இ என்ற ஒலியாக நிற்பதை உணரலாம். ஆகவே ஐ என்ற எழுத்துக்கு இனம் இ என்று ஒலியாராய்ச்சியை நன்கு கண்ட தமிழர் வரையறுத்தார்கள். அப்படியே ஔ என்ற எழுத்துக்கு உ என்பதை வைத்தார்கள். ஔ என்று சொல்லிப் பாருங்கள் ; அந்த ஒலி கடைசி யில் உ வில் வந்து நிற்கும்.

* * *

உயிர் எழுத்துக்களில் ஜோடி பிரிக்கும்போது அண்ணன் தம்பி யுறவு ஞாபகத்துக்கு வந்தது. மெய் யெழுத்துக்களிலும் ஜோடி பிரித்திருக்கிறார்கள். ஆனால் அங்கே கணவன் மனைவி என்ற உறவுதான் ஞாபகத்துக்கு வருகிறது. வல்லினம் ஆண் இனம், மெல்லினம் பெண் இனம் என்றால் அந்த உறவு முறைதானே இருக்க முடியும்? க என்பது ஆண் எழுத்து ; கணவனுடைய நிலையில் இருப்பது. அதற்கு மெல்லினத்துக்குள் ஒன்றை ஜோடியாகச் சேர்க்க வேண்டும். எப்படிச் சேர்ப்பது? க என்று உச் சரிக்கும்போது மூக்கிலிருந்து ஓசையை விட்டுப் பாருங் கள் ; ங என்ற சப்தத்தைப்போல ஒலிக்கும். க, ங என்ற இரண்டு எழுத்துக்களும் அடி நாக்கும் தொண் டையும் ஒட்டும்போது பிறக்கின்றவை. ஆகையால்

அந்த இரண்டும் ஒன்றற்கொன்று சம்பந்தம் உடையவை என்று வைத்தார்கள். க என்ற எழுத்துக்கு ங என்பதே இனம், இப்படியே சஞ-டண-தந-பம-றன என்பவை ஜோடிகள் ஆயின. ய ர ல வ ழ ள—என்ற ஆறும் அலி போன்றவை. அலிக்குக் கல்யாணம் செய்து என்ன பிரயோசனம்? ஆகையால் அவைகளுக்கு மனைவிமார் இல்லை, இனம் இல்லையென்று இலக்கணத்தில் வைத்திருக்கிறார்கள்.

மெல்லினமும் வல்லினமும் சேர்ந்து வரும்போது பெரும்பாலும் மேலே சொன்ன ஜோடிகளாகவே இருக்கும். சங்கு, பஞ்சு, தொண்டு, பந்து, கன்று என்பவற்றில் இந்த எழுத்துத் தம்பதிகள் சேர்ந்து வருவதைப் பார்க்கிறோம். சங்சு என்றோ, கன்து என்றோ வருவது எழுத்துக் குடும்பத்தில் விபசார தோஷத்துக்குச் சமானம்.

மரம்+சாய்ந்தது என்று இரண்டு வார்த்தைகள் இருக்கின்றன. தனித் தனியே நின்றால் மரம் என்பதிலுள்ள ம் அப்படியே நிற்கலாம். இரண்டு வார்த்தையும் சேரும்போது ம் என்ற எழுத்தும் சா என்ற எழுத்தும் ஒன்றுபடுவதில்லை. ம் என்ற பெண் தன் முன்னே நிற்கும் ஆடவனைப் பார்க்கிறாள்; தன் புருஷன் அல்ல என்று தெரிந்துபோகிறது. கற்புடைய பெண் அல்லவா? நடுநடுங்கிப் போகிறாள். தூர இருந்து பழகும்போது குற்றம் இல்லை என்று நின்றவள் அருகிலே வந்தபோது அஞ்சுகிறாள்., இப்படி ஓர் எழுத்து மற்றோர் எழுத்தோடு அருகில் வந்து ஒன்றுவதைப் புணர்வது என்று இலக்கணப் புலவர்கள் சொல்கிறார்கள். பெண்ணும் ஆணும் ஒன்றுபடு

வதையும் அதே வார்த்தையால் உலகத்தில் வழங்கு கிறோம்.

**ம்** என்ற கற்புடைய பெண் **சா** என்ற புருஷனைக் கண்டவுடன் என்ன செய்கிறாள் பார்ப்போம்; அந்தப் புருஷனுக்கு ஏற்ற பெண் யார் என்று பார்க்கிறாள்; அந்தப் பெண் அருகிலேதான் நிற்கிறாள். புணர்ச்சி யில் **ம்** என்ற பெண் அங்கே இருப்பதில்லை; **சா** என்ற கணவனுக்கு உரிய ஜோடியாகிய **ஞ்** என்ற பெண் வந்துவிடுகிறாள். எனவே, மரம்+சாய்ந்தது என்ற இரண்டையும் சேர்க்கும்போது **ம்** போய் **ஞ்** ஆகி மரஞ் சாய்ந்தது என்று முடிகிறது. கல்யாணம் கற்பு முறைப் படி நடந்துவிடுகிறது.

உலகத்தில் உள்ள கல்யாணம் எப்படியோ, அப் படியே எழுத்துலகிலும் கல்யாணம் நடைபெறுகிறது. அந்தக் கல்யாணத்தின் ஒழுங்கு முறைகளைத் தொல் காப்பியம் எழுத்ததிகாரத்தில் **புணரியல்** முதலிய அத் தியாயங்கள் மூலமாகத் தெரிவிக்கிறது.

# 14

# ஓசையின் அளவு

உலகத்தில் உருவம் படைத்த பொருள் எதுவாஞலும் அதற்குத் தோற்றமும் கேடும் இருக்கின்றன. கடவுளே ஓர் உருவத்தை எடுத்துக்கொண்டால், அதை நீங்கி நிற்கும் காலமும் அவருக்கு ஏற்படும். எழுத்துக்கள் ஒலியாகிய உருவத்தை உடையன. வேறு பிரித்து அறியும்படி மென்மை, வன்மை முதலிய தொனி வேறுபாடுகளும், குறில், நெடில் என்ற அளவு வேறுபாடுகளும் எழுத்துக்களுக்கு இருக்கின்றன. ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வோர் உருவத்தைப் பெற்றிருப்பதஞல் அதற்குத் தோற்றமும் கேடும் உண்டு. அப்படியாஞல் அழியாதது என்ற பொருளுடைய அக்ஷரம் என்ற சொல்லால் எழுத்துக்களை வடமொழியாளர் குறிக்கின்ருர்களே என்ருல், எழுத்து என்றும் இருக்கின்றது; ஆஞல் ஒரு மனிதன் ஒரு சமயத்தில் வெளிப்படுத்தும் எழுத்தென்னும் ஒலியானது அதற்குரிய கால அளவையில் ஒலித்துக் காற்றில் கலந்துவிடுகிறது. நம்முடைய காதிலே கேட்கும் கால அளவையை அதன் ஆயுளாகக் கருதிஞல் அதற்குத் தோற்றமும் மறைவும் உண்டென்றுதான் சொல்லவேண்டும். ஒரு மனிதன் ஒரு குறிப்பிட்ட காலத்தில் சொல்லும் அகரம் அழிந்துவிடுகிறது. ஆஞல் அதோடு அகரம் என்பதே உலகத்தை விட்டு அழிந்துவிடவில்லை. அதன் பண்பு

மக்கள் உள்ளத்தே நின்று, உருவம் வேண்டும் பொழு தெல்லாம் எடுத்துக்கொள்கிறது. அந்தப் பண்பு, நினைவு மாத்திரத்தில் அழியாமல் இருப்பதால்தான் அக்ஷரம் என்ற பெயர் எழுத்துக்கு வந்தது.

எழுத்துக்கு உருவம் இருப்பதனால் கால அளவை யும் உண்டு என்று தெரிந்துகொண்டோம். அந்தக் கால அளவைக்குக் குறிப்பிட்ட வாய்பாடு உண்டு. ஒரு நாள் என்றால் இருபத்து நாலு மணி நேரம் என்று மணிக்கணக்கால் அளந்து சொல்கிறோம். எழுத்தை அளப்பதற்கு மாத்திரை என்ற அளவை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். படியென்றால் இரும்பாலோ மரத் தாலோ ஒரு குறிப்பிட்ட அளவில் செய்து விடுகிறோம். காதில் கேட்கப்படும் எழுத்தின் ஒலியை அளக்க வழி என்ன?

கண்ணை ஒருதரம் இமைக்க எத்தனை நேரம் ஆகிறதோ அதை மாத்திரை என்று சொல்லுவார்கள். கையை நொடிப்பதும் அந்தக் கால அளவை உடை யதே. இந்த இரண்டிலும் இயற்கையாக நிகழும் இமைத்தலையே சிறப்பாகச் சொல்லுவார்கள். ஆனால் கைந்நொடியை அளவாகக் கொண்டதற்கும் ஒரு பிர யோசனம் உண்டு.

ஒரு மாத்திரையின் பின்னங்களை உணரக் கைந் நொடி உபயோகப்படுகின்றது. கைவிரல்களைச் சேர்க்க நினைக்கும்போது கால் மாத்திரையாகிறது. இரண்டு விரலையும் சேர்க்கையில் அரை மாத்திரை கழிகிறது. அவற்றை முறுக்கும்போது, அதாவது அழுத்தும் போது, முக்கால் மாத்திரை ஓடிவிடுகிறது. அப்படி முறுக்கிய விரலை விடும்போது முழுமாத்திரை ஆகிவிடு கிறது.

'உன்னல் காலே உறுத்தல் அரையே
முழுக்கல் முக்கால் விடுத்தல் ஒன்றே'

என்பது ஒரு பழைய இலக்கணச் சூத்திரம்.

இயற்கையாக உள்ள எழுத்துக்கள் அரை, ஒன்று, இரண்டு என்ற மாத்திரைக் கணக்குகளைக் கொண்ட மூன்று வகுப்பாக இருக்கின்றன. மெய் என்ற பிரிவை யுடைய எழுத்துக்களுடைய கால அளவு அரை மாத்திரை. குற்றெழுத்துக்கு ஒரு மாத்திரை. நெட் டெழுத்துக்கு இரண்டு மாத்திரை. இயற்கையாக இல்லாமல் சில காரணங்களால் ஓசை குறையும் எழுத் துக்களும் இருக்கின்றன. முன்னே சொன்ன குற்றிய லுகரம், குற்றியலிகரம், மகரக் குறுக்கம் முதலியவை இத்தகையனவே. இயற்கையான உகரத்துக்கும் இக ரத்துக்கும் ஒரு மாத்திரையே கால அளவு. குற்றியலுக ரம், குற்றியலிகரம் என்னும் இரண்டுக்கும் அந்தக் கால அளவு குறைகிறது. அரை மாத்திரைதான் அவைகளுக்கு மாத்திரை குறைவதனால்தான் அவை தனியாகப் பிரிக்கப்பட்டு குன்று இயல்—'மாத்திரை குறுகிய இயல்புடைய'—எழுத்துக்களாயின.

இயற்கை நிலையினின்றும் மாறினமையால் அவற் றின் பிரயோகங்களிலும் மாறுபாடுகள் உண்டா கின்றன. அரை மாத்திரையையுடைய மெய்களைப் பல விஷயங்களில் இந்த இரண்டெழுத்துக்களும் ஒத்து நிற்கின்றன. மெய்களைப் போல இவை இரண்டும் புள்ளி வைத்து எழுதும் இயல்பைப் பெற்றன, மெய்யும் உயிரும் சேரும்போது என்ன நிகழ்கின்றதோ அதுபோன்ற நிகழ்ச்சியே பெரும்பாலும் குற்றியலுகர மும் உயிரும் சேரும்போது நிகழ்கின்றது.

ஆய்தம் என்ற எழுத்துக்கு அரை மாத்திரை. அது பின்னும் குறைந்து ஒலிக்கும் இடம் உண்டு. அப்போது அதற்கு ஆய்தக் குறுக்கம் என்ற பெயரும் கால் மாத்திரையாகிய கால அளவும் ஏற்படுகின்றன. மகரக் குறுக்கம் என்ற குறுகிய எழுத்துக்கும் கால் மாத்திரைதான்.

ஐகார ஔகாரங்கள் சிறிது குறைந்த ஓசையோடு ஒலிப்பது உண்டு. அப்போது முறையே ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம் என்று அவற்றைச் சொல்வார்கள். இவற்றிற்குச் சில சமயம் ஒன்றரை மாத்திரையும் அமையும்.

இயற்கையான ஓசையினின்றும் எழுத்துக்கள் குறைந்து ஒலிப்பது போலவே நீண்டும் ஒலிப்பது உண்டு. குறைந்து ஒலிப்பது சில எழுத்துக்களுக்குத் தான் உண்டு. நீண்டு ஒலிப்பது உயிர், மெய் என்னும் இரண்டு வகை எழுத்துக்களுக்கும் உண்டு. வாழ்க்கையில் எழுத்துக்கள் நீண்டு ஒலிப்பதைத்தான் கேட்கலாம், யாரையாவது கூப்பிடுகையில், 'ராமாஆஆ!' என்று நீட்டிக் கூப்பிடுகிறோம். பாடுகிறவர் தம் இஷ்டம் போலவெல்லாம் நீட்டுகிறார். வீதியிலே புளி விற்கிறவன், 'புளீஇஇ!' என்று நீட்டுகிறான். வார்த்தைகளில் வரும் எழுத்துக்களுக்கெல்லாம் இலக்கணம் வகுத்த ஆசிரியர்கள் இந்த நீண்ட ஓசையையுடையவற்றிற்கும் இலக்கணம் வகுக்காமற் போகவில்லை.

உயிரெழுத்து, தன்னுடைய அளவாகிய மாத்திரையில் நீண்டு ஒலித்தலின் அதற்கு உயிர் அளபெடை என்று பெயர். அப்படி நீட்டி ஒலிக்கும்போது ஓசை

யின் நீளம் காதில் படுகிறது. அதை எப்படி எழுத்திலே குறிப்பது? ஓசை குறைந்த எழுத்துக்களை எழுத்தில் குறிக்கும்போது புள்ளியிடுவதை முன்பு பார்த்தோம். ஓசை மிக்க எழுத்துக்களைக் குறிக்கவும் ஒரு வழி செய்திருக்கிறார்கள். எந்த உயிரெழுத்து ஓசை அதிகமாகிறதோ—அளபெடுக்கிறதோ—அதன் இனமாகிய குற்றெழுத்தை அதன் பின்னே அடையாளமாக இட்டார்கள். எவ்வளவு தூரம் எழுத்து நீளலாம் என்பதற்குத் தொல்காப்பியர் வரையறை சொல்லாவிட்டாலும் 12 மாத்திரை வரையில் நீளலாம் என்று வேறு ஆசிரியர்கள் குறித்திருக்கிறார்கள். ஒரு மாத்திரை அதிகமானால் ஒரு குற்றெழுத்தும் இரண்டு மாத்திரை அதிகமானால் இரண்டு குற்றெழுத்தும் போடவேண்டும். இலக்கியங்களில் இரண்டு மாத்திரை அதிகமாக நீண்டு வருவதைக் காணலாம். அதற்கு மேல் சங்கீதம் முதலியவற்றிலே பார்க்கலாம்.

'ராமாஅஅ!' என்று எழுதினால் மா என்ற எழுத்து, தனக்கு இயல்பான இரண்டு மாத்திரையோடு பின்னும் இரண்டு மாத்திரை அதிகமாக உச்சரிப்பதற் குரியது என்று தெரிந்துகொள்ளலாம்.

உயிரெழுத்துக்களைப் போலவே மெய்யெழுத்தும் ஓசை மிக்கு ஒலிப்பதுண்டு. அது செய்யுளில்தான் வரும். அதற்கு ஒற்றளபெடை என்று பெயர். தொல்காப்பியா அதைச் செய்யுளிலக்கணம் சொல்லுமிடத்தில்தான் சொல்கிறார். ஒற்றளபெடையை எழுத்திலே குறிக்க மற்றொரு மெய்யெழுத்தைப் போடுவது வழக்கம்.

*தொல்காப்பியர் சங்கீதத்தில் எழுத்துக்கள் தமக் குரிய ஓசையினும் மிக்கு ஒலிக்கும் என்பதைச் சொல்லி யிருக்கிறார்.*

> ' அளபு இறந்து உயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
> உளவென மொழிப இசையொடு சிவணிய
> நரம்பின் மறைய என்மனார் புலவர் '.

*'உயிரெழுத்துக்கள் தம்முடைய மாத்திரையளவையும் கடந்து உச்சரிக்கப் பெறுதலும் மெய்யெழுத் துக்கள் ஒலி நீளுதலும் உண்டு என்பர். அது சங்கீதத் தோடு சம்பந்தப்பட்ட கந்தர்வ வேதமாகிய சாஸ்தி ரத்தில் என்று புலவர் கூறுவர்' என்பது இதன் பொருள்.*

# 15

# இலக்கண மரங்கள்

தமிழர் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தவர்கள்; தென்றலின் இனிமையையும் செங்கதிரவனது ஒளியையும் சந்திரனது அமுத கிரணத்தையும் நன்கு நுகர்ந்தவர்கள். கடல் அலைகளின் பேரொலியையும் மலையருவியின் ஒல்லொலியையும் கேட்டு இன்புற்றவர்கள். மரம், செடி, கொடிகளையும் பசு, எருமை, யானை, புலி, சிங்கம் முதலிய விலங்கினங்களையும் கிளி, குயில், மயில் முதலிய பறவைகளையும் நண்பர்களாகக் கொண்டு வாழ்ந்தவர்கள். வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை மரங்களிலிருந்து பெற்றுக்கொண்டார்கள். அவர்களுடைய ஊர் மரமடர்ந்தது; அதன் பெயர் மரத்திலிருந்து பிறந்தது; அவர்களுடைய வீடு மரங்கள் உதவிய பொருள்களால் அமைந்தது; உடை தழைகளாலும் மலர்களாலும் ஆனது.

காய், கனி, கிழங்கு, தானியம் ஆகிய தாவர விளை பொருள்களை உணவாகக் கொண்டார்கள். காதிலே தளிரைச் செருகிக் கொண்டார்கள்; தலையிலே கண்ணி சூடினர்; மார்பிலே மாலை புனைந்தனர். சாதியைக் குறிக்கத் தனித்தனி மாலை. போரில் ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு மாலை. கடவுளுக்குத் தனித்தனி அடையாள மாலை. இப்படியாக வாழ்வு முழுவதும் மரங்களோடும் மலர்களோடும் இணைந்து வாழ்ந்த

தமிழர்கள் இயற்கை வளம் செறிந்த காடுகளில் வசித்தார்கள். தமிழ்நாடு முழுவதையுமே தண்டகாரணியம் என்று புராணம் கூறுகிறது. அடர்த்தியான மரச் செறிவினிடையே வாழ்ந்த தமிழர்கள் சந்தோஷத்தையும் துக்கத்தையும், போரையும் காதலையும் குறிப்பிக்க அவற்றையே துணையாகக் கொண்டார்கள். அவர்களுடைய வாழ்க்கையில் மரஞ் செடி கொடிகள் எவ்வளவு தொடர்பு உடையனவாக இருந்தன என்பதைத் தெரிந்துகொள்ளத் தொல்காப்பியமும் ஓரளவு துணை செய்கிறது.

இலக்கண நூலிலிருந்து எப்படி வாழ்க்கையை உணரலாம் என்ற சந்தேகம் அன்பர்களுக்கு உண்டாகும். இலக்கணம் பாஷையின் இயல்பைச் சொல்கிறது. பாஷை என்பது என்ன? மனிதனது உள்ளக் கருத்தைப் புலப்படுத்துவதற்குரிய கருவி அது. அவனுடைய கருத்துக்கும் வாழ்வுக்கும் சம்பந்தம் இல்லையா? வாழ்வில் நிகழும் நிகழ்ச்சிகளையும், வாழ்வில் பயன்படும் பொருள்களையும், அவை சம்பந்தமான எண்ணங்களையும் பற்றிய செய்திகளை வெளியிடப் பாஷை உதவி செய்கிறது. ஒரு பாஷையில் எந்த வகையான பொருள்களுக்கு அதிகமான பெயர்கள் உண்டோ, அந்த வகையான பொருள்கள் அந்தப் பாஷையைப் பேசுகிறவர்களின் வாழ்க்கையில் நெருங்கிய சம்பந்தமுடையன என்று தெரிந்துகொள்ளலாம்.

இந்த உண்மையை வைத்துக்கொண்டு பார்ப்போமானால் தமிழ் மொழியில் எவ்வளவோ மரஞ்செடி கொடிகளுக்குப் பேர்கள் அமைந்திருப்பதை உணர்ந்து தமிழர் அவற்றை வாழ்க்கையிலே நன்கு பயன்

படுத்திக் கொண்டார்களென்று ஊகித்துத் தெரிந்து கொள்ளலாம்.

பேச்சு வழக்கில் வார்த்தைகள் எப்படி எப்படி மாறுகின்றன என்ற விஷயத்தை இலக்கணம் சொல்கிறது. மா என்பது ஒரு மரத்தைக் குறிக்கும் பெயர். அதைத் தனியே சொல்லாமல் மரம் என்பதையும் சேர்த்து மாமரம் என்று சொன்னால் விளக்கமாக இருக்கிறது. மாமரத்தில் வசந்த காலத்தில் பூவைக் காண்கிறோம். குழந்தைகூட 'மாம்பூ' என்று சொல்லுகிறது. **மா** என்பதனோடு **பூ** என்பதைச் சேர்த்துச் சொல்லும்போது நடுவிலே ஒரு **ம்** வருகிறதே; இதை இலக்கண நூலார் கவனித்திருக்கிறார்கள். குழந்தை இலக்கணம் தெரிந்தா பேசுகிறது? இல்லை, இல்லை. இயற்கையில் அந்த மாதிரியாகத் தமிழ் அமைந்திருக்கிறது. அதைப் பார்த்துப் பார்த்து இலக்கண ஆசிரியர்கள், **மா** என்ற பெயரும் **பூ** என்ற பெயரும் ஒன்றுபட்டால் நடுவில் **ம்** வரும் என்று தீர்மானித்தார்கள். அதுதான் இலக்கணம். வாழ்க்கைக்குப் புறம்பே எங்கோ வறண்ட பாலைவனப் பிரதேசத்திலிருந்து நம்மைப் பயமுறுத்துவதற்காக வந்திருக்கிற பூச்சாண்டி அல்ல, இலக்கணம். மாங்காயில் வரும் **ங்** என்ற எழுத்தும், மாம்பழத்தில் வரும் **ம்** என்ற எழுத்தும், சொல்லும் சொல்லும் சேர்ந்து புணரும் போது, க ல் யா ண ம் செய்துகொள்ளும்போது, இடையே தோன்றும் அலங்காரங்களைப் போன்றவை.

இந்த முறையில் புணர்ச்சியில் உண்டாகும் மாறுபாடுகளைத் தொல்காப்பியத்தில் உள்ள எழுத்ததிகாரத்தில் ஆறு அத்தியாயங்கள் விளக்குகின்றன.

தமிழில் வரும் சொற்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு அவைகளுக்கு இலக்கணம் வகுப்பதென்றால் அதற்கு எல்லையே இராது. ஆதலால் ஒவ்வொரு வார்த்தையிலும் கடைசியில் வரும் எழுத்தைக் கொண்டு, இன்ன எழுத்து இறுதியாக வந்து இன்ன எழுத்தோடு சேர்ந்தால் இப்படி மாறுதல்கள் உண்டாகும் என்று இலக்கணம் சொல்லியிருக்கிறார்கள். பலா என்ற சொல் எப்படி மாறும் என்பதை ஆ என்ற கடைசி எழுத்தையுடைய சொற்களின் இலக்கணம் எங்கே சொல்லியிருக்கிறதோ, அங்கே பார்க்கலாம்.

தனித்தனியே சொற்களை எடுத்து இலக்கண விதி அமைப்பது கஷ்டந்தான்; ஆனாலும் தொல்காப்பியத்தில் பல சூத்திரங்களில் மரங்களின் பெயர்களைக் குறிப்பிட்டு இலக்கணம் அமைக்கிறார் தொல்காப்பியர்; பொதுவாகவும் மரப் பெயர்களுக்கு உரிய இலக்கணத்தைச் சொல்கிறார்; சில மரங்களுக்குத் தனித்தனியேயும் இலக்கணம் சொல்கிறார்; அவற்றைக் கொண்டு மரப் பெயர்களுக்குத் தமிழ் மொழியில் அதிகமான பிரயோகம் இருந்திருக்க வேண்டுமென்று தெரிந்து கொள்ளலாம். தமிழர் மரங்களிடையே வாழ்க்கை நடத்திவந்தமையின் அவர்கள் அவற்றை அடிக்கடி குறிப்பிட்டுப் பேசியது ஆச்சரியம் அல்ல.

தொல்காப்பிய எழுத்ததிகாரத்தில் அங்கங்கே மரங்களை நட்டுவைத்திருக்கிறார் தொல்காப்பியர். இருபத்தேழு இடங்களில் தொல்காப்பியர் அவசியமென்று கருதிக் காட்டும் மரங்கள் காட்சி அளிக்கின்றன. காட்சிக்கு விஷயமான பிரபஞ்சத்தில் உள்ள

மரங்களைக் கேள்விக்கு விஷயமான சப்தப் பிரபஞ்சப் பொருளாகக் காட்டுகிறார். இதுதான் வித்தியாசம்.

தாவர நூலாசிரியர் மரங்களை வகுக்கும் விதம் ஒருவகை. இவை கிளையில்லா மரங்கள், இவை விதை யில்லா மரங்கள், இவை இன்ன உருவத்தையுடைய மலரைப் பெற்ற மரங்கள் என்று கண்ணால் காணும் மரத்தின் உறுப்புக்களைக் கொண்டு அவற்றை அவர் வகைப்படுத்துகிறார். இலக்கண நூலாசிரியராகிய தொல்காப்பியரோ சப்தப் பிரபஞ்சத்திலுள்ள மரங் களை அவற்றின் பெயரில் உள்ள எழுத்தாகிய உறுப் புக்களைக் கொண்டு வகுக்கிறார். மாமரமும், பலா மரமும், விளாமரமும் தாவர சாஸ்திரிக்கு வெவ்வேறு குடும்பத்தைச் சேர்ந்தனவாக இருக்கலாம். ஆனால் இலக்கண நூலாசிரியனுக்கு அவை மூன்றும் ஒரே சாதி. ஏன் தெரியுமா? அந்த மூன்று மரத்தின் பெயர்களும் ஆ என்ற எழுத்தைக் கொண்டு முடி கின்றன.

யா, பிடா, தடா என்பவை சில மரங்கள். நமக்கு இந்த மூன்றுமே தெரியாத மரங்கள், இந்த மூன்றும் தொல்காப்பியருக்கு ஒரு சாதி. அதனால் மூன்றையும் ஒன்றாக வைத்து இலக்கணம் சொல்கிறார்.

> **'யாமரக் கிளவியும் பிடாவும் தடாவும்**
> **ஆம்முப் பெயரும் மெல்எழுத்து மிகுமே'**

என்பது ஒரு சூத்திரம். **யா** என்ற மரப் பெயரும், **பிடா, தடா** என்ற மரப் பெயர்களும் மற்றொரு வார்த்தையோடு சேரும்போது நடுவில் மெல்லின எழுத்து வரும் என்பது இதன் அர்த்தம். யா மரத்

தின் கிளையை யாங்கிளை என்று சொல்வார்கள் ; பிடா மரத்தின் கொம்பைப் பிடாங்கொம்பு என்று கூறுவது வழக்கம் ; தடா மரத்தின் பூவைத் தடாம்பூ என்று சொல்வது மரபு. இந்த மூன்றிலும் நடுவில் மெல் லெழுத்து வந்திருக்கிறது. இப்படியே மாமரக் கிளவிக் கும் (மா என்ற மரத்தின் பெயருக்கும்) இலக்கணம் வருகிறது.

ஆ என்ற எழுத்துக்குப் பிறகு இ வருகிறது. இ என்று முடிகின்ற உதி, புளி என்ற மரங்களைத் தொல் காப்பியர் கூறுகிறார். ஓடு, சே, விசை, ஞெமை, நமை, பனை, ஆவிரை, ஆண், இல்லம், எகின், ஆர், வெதிர், சார், பீர், நெல், புல், வேல், ஆல், குமிழ் என்ற தாவர வர்க்கங்கள் தொல்காப்பியத்தில் காணப்படுகின்றன.

ஒரு குழந்தை தென்ன மரத்தைப் பார்த்திருக் கிறது ; பன மரத்தைப் பார்த்ததில்லை. அதற்குப் பன மரத்தைப்பற்றி விளக்க வேண்டுமானால் நாம், 'தென்னமரம் மாதிரியே இருக்கும்' என்று ஆரம்பிக் கிறோம். தொல்காப்பியரும் இத்தகைய தந்திரத்தைச் செய்கிறார். உதி என்ற மரப் பெயருக்கு முதலில் இலக் கணம் சொல்லிவிடுகிறார். பிறகு ஓடு என்ற மரப்பெயர் வரும்போது, 'முன்னே காட்டினேனே உதி மரம், அது போன்றதுதான் இதுவும்' என்று சொல்கிறார். மனிதனுடைய ஞாபகம் ஒன்றனோடு ஒன்று தொடர்ந்து செல்லும். தொடர்புடைய வஸ்துக்களை நினைப்பது எளிது. ஆகையால் ஒரு மரப் பெயருக்கு இலக்கணம் சொல்லும்போது வேறொரு மரப் பெயரை ஞாபகப்படுத்துவது மன இயல்பை உணர்ந்து செய்யும் காரியம். பனமரம் தூண்மாதிரி இருக்கும் என்று

சொல்லாமல் தென்ன மரம் மாதிரி இருக்கும் என்று மற்ெருரு மரத்தையே உபமானமாகச் சொல்வதிலும் இந்தத் தத்துவம் அடங்கியிருக்கிறது.

ஆண் என்ற மரத்தைப்பற்றிச் சொல்லும்போது அரை என்ற மரத்தை ஞாபகப்படுத்துகிருர் தொல் காப்பியர். அவர் கூறும் மரங்களில் பலவற்றை நாம் பார்த்திருக்கமாட்டோம்; பலவற்றின் பெயர்களைக் கூடக் கேட்டிருக்க மாட்டோம். ஆண் மரத்தை யார் கண்டார்கள்? நமக்கு ஆண் விலங்கையும், ஆண் மகனையுந்தான் தெரியும். சார் என்பது மரமா செடியா கொடியா என்று கூடத் தெரியாது. தமிழர் வாழ்வில் அவை பயன்பட்டன என்பதற்கு அவர்களுடைய பேச்சிலே அவை விரவி வந்தது சாட்சி. அவர்கள் பேச்சிலே அந்த மரங்கள் விரவின என்பதற்குத் தொல் காப்பியம் சாட்சி சொல்லுகிறது.

# 16

# அங்காடிப் பேச்சு

**பா**ண்டி நாட்டுக்குத் தலைநகரம் மதுரை. அங்கே பல நாட்டினரும் வந்து கூடிப் பாண்டி நாட்டுப் பொருள்களை வாங்கிச் சென்றார்களாம். கடல் கடந்து வந்த யவனர்கள் பலர் அங்கே வாழ்ந்தார்கள். அவர்களுக்குத் தனி வீதியே இருந்ததாம். அதற்கு யவனச் சேரி என்று பெயர்.

பகற்காலத்தில் பண்டங்களை விற்பனை செய்யும் கடை வீதிகளும் இரவிலே பண்டங்களை விற்கும் இடங்களும் தனித்தனியே இருந்தனவாம். பகலில் வியாபாரம் நடைபெறும் இடத்திற்கு **நாள் அங்காடி** என்றும் இரவுக் கடைகளுக்கு **அல்லங்காடி** என்றும் பெயர்கள் இருந்தன. சென்னையில்கூட மாலைக் கடை வீதி (Evening Bazaar) இருக்கிறதல்லவா?

அங்காடிகளில் இன்ன பண்டம் விற்கப்படும் என்பதை நெடுந்தூரத்திலிருந்தே தெரிந்துகொள்ளலாம். பகலில் ஒவ்வொரு கடையிலும் ஒவ்வொரு வகையான கொடியை உயர்த்தி இருப்பார்கள். அந்தக் கொடியைக் கொண்டே இன்ன பண்டம் அங்கே விற்கப்படுகிறது என்று தெரிந்துகொள்ளலாம். இரவு நேரங்களில் அல்லங்காடியில், விளக்கினால் இந்த விளம்பரத்தைச் செய்வார்களாம்.

சிலப்பதிகாரத்திலும் மதுரைக் காஞ்சியிலும் மதுரைக் கடைவீதியின் சிறப்பு விரிவாகச் சொல்லப்

பட்டிருக்கிறது. சற்றேறக்குறைய இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு இருந்த நிலை அது. அதைக் கடைச் சங்க காலம் என்று சொல்லுவார்கள். அக்காலத்துக்குப் பல வருஷங்களுக்கு முன் இருந்தது இடைச் சங்கம். அந்த இடைச் சங்கத்துக்கு இலக்கணமாகிய தொல்காப்பியத்தில் வரும் செய்திகளைக் கொண்டு தமிழருடைய வியாபாரப் பெருக்கத்தை ஒருவாறு உணர முடிகிறது.

* * *

இயற்கையோடு ஒன்றி வாழ்ந்துவந்த தமிழர்கள் கடவுள் தன்மையையும் இயற்கை எழிலையும் உணர்ந்து இன்புற்றார்கள். அவர்கள் நாகரிகம் எல்லாத் துறைகளிலும் உயர்ந்து நின்றது. தமிழ்ச்சாதி சோம்பேறியாகக் காலம் கழிக்கும் சாதி அன்று. நிலத்துக்கும் குடும்பத்திற்கும் ஏற்ற தொழில் முயற்சிகளைப் பரம்பரையாகப் போற்றிப் பாதுகாத்துவந்த சாதி. ஒரு குலத்திலே பிறந்தவன் தன்னுடைய சாதிக்கு உரிய தொழிலை விடாமல் தன் அறிவுத் திறமையை அத்தொழிலிலே காட்டிப் புகழ் படைத்தான். புதியதாக ஒரு தொழிலை ஒருவன் கற்றுக்கொள்ள வேண்டுமானால் அடியே பிடித்துப் பயிற்சி செய்யவேண்டும். பரம்பரையாக வந்த தொழிலாக இருந்தால், அத்தொழிலுக்குரிய உணர்ச்சி இரத்தத்திலே ஊறிக் கிடக்கும். வீடு முழுவதும் அத்தொழில் மணம் வீசும். அதனிடையே பிறந்து வளரும் குழந்தையின் உடல் வளரும்போது அதன் அறிவில் குடும்பத் தொழிலுக்குரிய வன்மையும் சிறிதும் சிரமம் இல்லாமலே ஏறி வளருகின்றது. இந்தக் காரணத்தைக் கொண்டே,

'குலவித்தை படிக்காமலே பாதி வந்துவிடும்' என்று பழங்காலப் பழமொழி ஒன்று அறிவுறுத்துகின்றது.

'குலவிச்சை கல்லாமற் பாகம் படும்.'

தம் தொழில்களைப் பாதுகாத்துவந்ததோடு மட்டும் நில்லாமற் பிற நாட்டுத் தொழில் வல்லுநர்களை அழைத்து வந்து அரசர்களுடைய ஆதரவினால் அவர்களுக்கு வேண்டியன உதவி, அவர்களுக்குத் தெரிந்த அரிய கலைத்திறனையும் கற்று வல்லவரானார்கள், தமிழர்கள். வடநாட்டிலிருந்து வந்த தொழிலாளிகளையும், யவன தேசத்திலிருந்து வந்த தொழில் வன்மை படைத்தவர்களையும், சீன தேசத்திலிருந்தும் பிற நாடுகளிலிருந்தும் வந்த கலைஞர்களையும் தங்கள் உறவினர்களைப்போல உடனுறையச் செய்து ஆதரித்துக் கலையைக் கற்றார்கள்.

தொழில் முயற்சிகள் வீறு பெற்று ஓங்கின. அவற்றோடு வியாபாரமும் பரவியது. நாகரிகமும் செல்வமும் படைத்த நாடுகளில் தொழிலும் வியாபாரமும் ஓங்கி நிற்பதை இன்று நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். தமிழ்நாடு இதே அளவில் தொழிலையும் வாணிகத்தையும் வளர்க்காவிட்டாலும், அக்காலத்தில் இருந்த நிலையில் பிற நாட்டாரும் போற்றும்படி அவை இருந்தன என்று சொல்லலாம்

அங்காடிகளில் தமிழர் தம் தொழிற் சிறப்பையும் வாணிகத் திறமையையும் பிற நாட்டாரோடு கலந்து உறவாடும் நல்லியல்பையும் புலப்படுத்தினர். தொல்காப்பியத்தில் அங்காடி வருகிறது. அங்காடியின் வருணனை இல்லாவிட்டாலும் அங்காடியிலே

வழங்கும் பேச்சு வருகிறது : அதன் இலக்கணத்தைத் தொல்காப்பியர் ஆராய்கிறார். வீட்டிலும் நாட்டிலும், பண்டிதரிடத்தும் பாமரரிடத்தும், அங்காடியிலும் ஆலயத்திலும் தமிழ் வழங்கின நாள் அது. ஆகவே தமிழுக்கு இலக்கணம் வகுத்த அப்பெரியார் அந்த இடத்திலே வழங்கும் மொழிகளுக்கும் இலக்கணம் அமைப்பது இயல்புதானே ?

* * *

**ம**ற்ற இடங்களில் அதிகமாக வழங்காமல் அங்காடியில் பெருக உபயோகப்படும் வார்த்தைகள் எவை ? அங்காடியில் வாங்கும் பண்டங்களை நாம் வீட்டில் உபயோகப்படுத்துகிறோம். அந்தப் பண்டங்களின் பெயர்கள் அங்காடியிலும் வீட்டிலும் ஒருங்கே வழங்கப்படுகின்றன. ஆனால் அதன் அளவும் விலையும் பெரும்பாலும் அங்காடிப் பேச்சாகவே நின்று விடுகின்றன. 'துணி, கஜம் என்ன விலை ; நாலு அணுவா ? சரி, ஐந்தரை கஜம் கிழித்துக் கொடு', 'ரூபாய்க்கு இரண்டு படி உளுந்து ; வேண்டுமானால் வாங்கிக்கொள்ளுங்கள்', 'பத்துப்பலம் மிளகாய் போதுமா ? இன்னும் ஒரு பத்துப் பலம் போடட்டுமா ?'—இந்தமாதிரி, பண்டத்தையும் அதன் அளவையும் ஒருங்கே சேர்த்துச் சொல்வதை அங்காடியில் தான் ஒவ்வொரு நிமிஷமும் கேட்கிறோம், 'துணி பளபளப்பாக இருக்கிறது', 'உளுந்து அப்பளத்திற்கு உபயோகப்படும்', 'மிளகாய் மிகவும் பழையது' என்று பண்டத்தின் குணங்களைத்தான் வீட்டுப் பேச்சிலே அதிகமாகக் கேட்கிறோம்.

அங்காடிப் பேச்சைக் கவனித்த தொல்காப்பியர் எந்த எந்தக் கணக்கு எப்படி எப்படித் தமிழர் பேச்சில் மாறி வருகிறதென்பதைச் சொல்கிறார் தொல்காப்பியத்துக்கு உரை வகுத்த பெரியாராகிய **நச்சினார்க்கினியர்** அளவுகள் ஏழு வகையாக இருந்தன என்று தெரிவிக்கிறார்.

இந்தக் காலத்தில் பள்ளிக்கூடங்களில் நான்கு விதமான அளவைகளைச் (Measures) சொல்லித் தருகிறார்கள். நீட்டலளவை, முகத்தலளவை, நிறுத்தலளவை, எண்ணலளவை என்பன அவை. எண்ணல் அளவையே எல்லாவற்றிற்கும் மூலமானது : ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணுவது. இதை **எண்ணி அளத்தல்** என்று அக்காலத்தில் சொன்னார்கள். துணியை அளப்பதற்கும், நிலத்தை அளப்பதற்கும் நீட்டல் அளவையாகிய அடி, கஜம் என்பவை பயன்படுகின்றன. இந்த அளவையை **நீட்டி அளத்தல்** என்று தமிழர்கள் சொன்னார்கள். முகத்தலளவை என்பது படி, மரக்கால் என்ற அளவுகள். பாலை அளந்தாலும் சரி, நெல்லை அளந்தாலும் சரி, இரண்டும் இந்தக் கால முறைப்படி முகத்தலளவைதான். ஆனால் இந்த இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறது.

வேடிக்கையாகக் குழந்தைகளுக்குச் சொல்லும் கணக்குகள் பல உண்டு. அதில் ஒன்று : 'ஒரு படி உளுந்து எட்டு அணா ; தலை வழிக்க வாங்கினால் ஆறணா. ஒரு படி நெய் மூன்று ரூபாய் ; தலை வழிக்க என்ன விலை ?' என்று கேட்பார்கள். குழந்தை உடனே 'இரண்டே கால் ரூபாய்' என்று சொல்லும். எல்லோரும் சிரிப்பார்கள். முழுப்படியாக

வாங்குவதும், தலைவழிக்க வாங்குவதும் நெய் விஷயத்தில் ஒன்றுதான் என்பது தெரிந்தால் குழந்தை, 'மூன்று ரூபாய்' என்றே விடை சொல்லும்.

இந்த வேடிக்கைக் கணக்கில் ஓர் உண்மை இருக்கிறது. நெய் முதலிய திரவ பதார்த்தங்களை அளப்பதிலும் நெல் முதலிய தானியங்களை அளப்பதிலும் உபயோகப்படும் அளவு கருவி ஒன்றாக இருந்தாலும் இரண்டு வகை அளவுகளிலும் வேற்றுமை உண்டென்பதை இது புலப்படுத்துகிறது. இதனை அறிந்த தமிழர்கள் முகத்தல் அளவையை இரண்டாகப் பிரித்தார்கள்; நெய்க் கணக்கு வேறு, நெல்லுக் கணக்கு வேறு. முதல் அளவையைப் **பெய்து அளத்தல்** என்றும், பின் அளவையைத் **தேங்க முகந்தளத்தல்** என்றும் சொன்னார்கள்.

* * *

**நா**ம் பேசுகிறோம்; அரைமணி பேசியதாகத் தெரிகிறது. கடிகாரத்தைப் பார்த்து அந்தக் கணக்கைத் தெரிந்துகொள்கிறோம். கடிகாரத்தை மாத்திரம் பார்த்தால் தெரியாது; நாம் பேசிய நேரத்தையும் கடிகாரத்தின் மணி அளவையும் சார்த்திப் பார்த்து இந்தக் கணக்கைத் தெரிந்துகொள்கிறோம். இத்தகைய கால அளவையைச் **சார்த்தி அளத்தல்** என்று சொல்லுவார்கள். ஓசையின் உயர்வு தாழ்வை யாழிலும் குழலிலும் தெரிந்துகொள்கிறோம். யாழ் நரம்பை மீட்டி அதன் கணக்கை **ஸ்வரம்** என்று அமைத்திருக்கிறார்கள். சாகித்தியத்திற்கு ஸ்வரம் போடுவதும் ஒரு கணக்குத்தான். நரம்பை மீட்டி அளக்கும் அதற்குத் **தெறித்தளத்தல்** என்ற பெயரை அளித்தார்கள். நிறுத்தலளவையை நிறுத்தளத்தல் என்று சொன்னார்கள்.

ஆகவே, எண்ணி அளத்தல், நீட்டி அளத்தல், பெய்து அளத்தல், தேங்க முகந்து அளத்தல், சார்த்தி அளத்தல், தெறித்து அளத்தல், நிறுத்து அளத்தல் என்ற ஏழு வகையான அளவுகளைத் தமிழர்கள் கொண்டிருந்தார்கள். இந்த அளவைகளில் அங்காடிப் பேச்சில் அதிகமாக வழங்கிவந்தவை மூன்று என்று தெரிய வருகிறது. எண்ணல் அளவை, நிறுத்தல் அளவை, தேங்க முகந்தளத்தல் என்னும் இம் மூன்றை யும் எண், நிறை, அளவு என்று அடிக்கடி தொல்காப் பியர் குறிப்பிடுகிறார். அங்காடிப் பேச்சிலே தலைமை பெறும் இந்த மூன்றைப் பற்றியும் அவற்றின் வகை களைப்பற்றியும் பல பழஞ் செய்திகளை எழுத்ததிகாரத் திலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

17

# எண்ணத் தெரியுமா?

தமிழ் நாட்டிலே பழகாத அயல் நாட்டார் ஒருவர் தமிழைக் கற்றுக்கொள்கிருர். கூடியவரையில் சிரத்தையோடு பயின்று வருகிருர். தொல்காப்பியத்தை நன்ருகப் படிக்கிருர். மற்ற இலக்கியங்களை இன்னும் படிக்கவில்லை. தொல்காப்பியம் மிகவும் பழங் காலத்து இலக்கண நூல் என்றும், இப்பொழுது கிடைக்கும் தமிழ் நூல்களுள் அதுவே காலத்தால் முந்தியதென்றும் தெரிந்துகொண்டு ஆழ்ந்து பயின்று, தொல்காப்பியத்திஞல் உணரப்படும் செய்திகளைத் தொகுக்கிருர். அவருக்கு என்ன என்ன விஷயங்கள் கிடைக்கும்? தமிழர்கள் அந்தக் காலத்திலேயே நன்ருக வாழும் வகைகளை உணர்ந்திருந்தார்கள் என்ற செய்தி கிடைக்கும். மரங்களும் மலர்களும் அவர்கள் வாழ்க்கையில் இன்பத்துக்குக் கருவிகளாயின என்பது தெரியும். காதலும் வீரமும் தமிழர் வாழ்க்கையில் இரண்டு மூச்சு நாடிகள் என்பதை உணர்வார்.

எழுத்ததிகாரத்தை வாசித்து முடித்தாலே பல பல செய்திகள் தெரியவரும். தமிழர்கள் வியாபாரத் துறையிலும் சிறந்தவர்கள் என்பதைத் தெரிந்து கொள்ள முடியும். அவர்களுக்கு எண்ணத் தெரியுமா? அளக்கத் தெரியுமா? நிறுக்கத் தெரியுமா?—எல்லாம் தெரியும் என்ற செய்தியைத்

தொல்காப்பியத்தின் முதல் அதிகாரமே புலப்படுத்து கிறது.

ஒன்று முதல் பத்து வரையில் எண்ணத் தெரியும். பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்று இப்படி எண்ணிக்கொண்டே போகத் தெரியும். 'இதென்ன? அரிச்சுவடி தெரியும், எண்சுவடி தெரியும் என்பதை யெல்லாம் பிரமாதமாகத் தமிழர்களுடைய கௌரவத் துக்குக் காரணமென்று சொல்வீர்கள்போல் இருக் கிறதே!' என்று நண்பர்கள் பரிகாசம் செய்ய எண்ணலாம். பல நூற்றாண்டுகளுக்கு முன்பு, 'நாமே நாகரிகத்தின் உச்சத்தில் இருக்கிறோம்!' என்று இறுமாந்து நிற்கும் இந்தக் காலத்து மக்களும் கண்டு பொறாமைப்படும் அமைதியான வாழ்க்கை வாழ்ந்த அவர்கள், இத்தகைய வரையறைகளைக் கொண்டிருந் தார்கள் என்பது ஆச்சரியம் அல்லவா? மொஹெஞ்ச தாரோவில் உடைந்த மரக்கால் ஒன்று கிடைக்கிற தென்றால், அதை எடுத்துப் படம் பிடித்துச் சரித்திர ஆராய்ச்சி செய்யப் புகுவது எவ்வளவு உபயோகமோ அவ்வளவு உபயோகம் இந்த ஆராய்ச்சியிலும் இருக் கிறது. அது மரக்கால் என்ற பண்டத்தின் ரூபத்தைப் பற்றிய ஆராய்ச்சி; இதுவோ அந்தப் பண்டத்தின் பெயரைப்பற்றிய ஆராய்ச்சி. ரூபமாக இருந்தால் என்ன? நாமமாக இருந்தால் என்ன? இரண்டும் அத்தகைய பொருள் வழங்கியதைப் புலப்படுத்தும் சாட்சிகளே அல்லவா?

தொண்ணூறு, நூறு, தொள்ளாயிரம், ஆயிரம், ஈராயிரம், நூறாயிரம் வரையில் தமிழர்கள் எண்ணி வந்தார்கள். தொல்காப்பியத்தில் இந்த எண்களைப்

பற்றிச் சொல்ல என்ன காரணம்? பன்னிரண்டு என்ற வார்த்தை எப்படி வந்ததென்பதை இலக்கண வழியில் தொல்காப்பியர் ஆராய்கிறார். பத்தும் இரண்டும் சேர்ந்து பன்னிரண்டு ஆகின்றன. பத்து, இரண்டு என்ற இரண்டு வார்த்தைகள் புணரும்பொழுது என்ன என்ன மாற்றங்களை அடைகின்றன என்பதை வரையறுக்கிறார். இப்படியே மற்ற எண்கள், அளவுப் பெயர்கள், நிறைப் பெயர்கள் ஆகியவற்றின் ஆராய்ச்சி தொல்காப்பியருடைய புணர்ச்சி இலக்கணத்தில் அகப் படுகிறது.

* * *

நூறாயிரத்தை லக்ஷம் என்று இப்போது வழங்கு கின்றோம். ல என்ற எழுத்து, பழைய தமிழில் ஒரு வார்த்தையின் முதல் எழுத்தாக வராது. வடமொழி வார்த்தை தமிழில் வர வேண்டுமானால் அதற்கு முன்னால் இ என்ற எழுத்து வந்து ல என்ற எழுத் துக்குக் கை கொடுக்க வேண்டும். லங்கை என்பது இலங்கை என்றும், லாபம் என்பது இலாபம் என்றும் வரும்.

தொல்காப்பியத்தில் லக்ஷம் என்ற பெயர் வர வில்லை. நூறாயிரம் என்றே பழந் தமிழர் வழங்கியிருக்க வேண்டும். கடைச்சங்க நூல்களில் கோடி என்ற எண்ணும் வருகின்றது. அதற்கும் மேலே தமிழர் எண்ணத் தெரிந்துகொண் டிருந்தனர். கோடிக்கு மேல் மூன்று எண்ணிக்கைகளின் பெயர்களைத் தொல்காப் பியச் சூத்திரம் ஒன்று குறிக்கின்றது.

**'ஐஅம் பல்என வருஉம் இறுதி**
**அப்பெயர் எண்ணினும் ஆயியல் நிலையும்'.**

ஏழு என்ற வார்த்தைக்கு முன் எண்ணிக்கைப் பெயர்கள் வந்தால் இரண்டும் சேர்ந்து எப்படி வழங்கும் என்பதைச் சொல்லும் இடத்தில் இந்தச் சூத்திரம் இருக்கிறது. ஏழ் என்பதே ஏழு என்ற அர்த் தத்தைத் தருவது. அதற்கு முன்னால் எண்ணலளவைப் பெயராகிய **தாமரை, வெள்ளம், ஆம்பல்** என்ற மூன்றும் வந்தால் ஏழ்தாமரை, ஏழ்வெள்ளம், ஏழாம்பல் என்று நிற்கும். இதைச் சூத்திரம் சொல்கிறது. 'ஐ, அம், பல் என்று வருகின்ற இறுதியையுடைய, பண்டங்களின் பெயர் அல்லாத எண்களின் பெயர்களாகிய மூன்றும் வந்தாலும் முன்னே சொன்னபடி நிற்கும்' என்பது இதன் பொருள். கோடிக்கு மேலே உள்ள ஒரு பெரிய அளவுக்குத் தாமரை என்றும், அதற்கும் மேற்பட்ட ஓர் எண்ணுக்கு வெள்ளம் என்றும், அதையும்விடப் பெரிய எண் ஒன்றுக்கு ஆம்பல் என்றும் பெயர் வழங்கின செய்தி இதனால் தெரிய வருகிறது.

* * *

பின்ன எண்ணைத் தொல்காப்பியர் '**பால்வரை கிளவி**' என்று சொல்கிறார். தமிழில் உள்ள எண்சுவடி யில் கீழ்வாயிலக்கம், மேல்வாயிலக்கம், குழிமாற்று முதலிய பலவகைக் கணக்கு வகைகள் உண்டு. அவை தொன்று தொட்டுத் தமிழ் நாட்டில் வழங்கி வந்திருக் கின்றன. அதில் உள்ள பெயர்களில் பெரும்பாலன தனித் தமிழ்ப் பெயர்கள். அவற்றைக் கொண்டே அவை தமிழ் நாட்டின் வாழ்க்கையில் பல காலமாக ஒன்றி வழங்கி வந்தன என்பதை உணரலாம்.

வடமொழியில் சங்கம், பத்மம் என்பனபோன்ற பேரெண்கள் வழங்குகின்றன. தாமரை என்பது

பத்மம் என்பதன் மொழிபெயர்ப்பாக இருக்கலாம். ஆனால் வெள்ளம் என்ற சொல்லும் ஆம்பல் என்ற சொல்லும் அங்ஙனம் வந்தன என்று தோன்றவில்லை. வெள்ளம் என்ற எண்ணைத் தமிழ் நூல்களில் பல இடங்களில் காணலாம். கம்பராமாயணத்தில் சேனைக் கணக்கு வரும் இடங்களில், ' ஆயிர வெள்ளம் சேனை ' என்பதுபோல இந்த வார்த்தை வருவதை உணரலாம்.

திருமுருகாற்றுப்படையில், ' தாமரை பயந்த தாவில் ஊழி, நான்முக ஒருவன் ' என்று ஒரு பகுதி வருகிறது. 'தாமரையென்னும் எண்ணையுடைய ஆண்டு களைத் தன் ஆயுளாகப் பெற்ற பிரமதேவன் ' என்று நச்சினார்க்கினியர் அர்த்தம் செய்கிறார். பிரமதேவன் தாமரையில் வாழ்பவன் ; அலரோன், பதுமன் என்ற பெயர்களால் வழங்கப் பெறுபவன். அவனுடைய ஆயுளையே ஓர் அளவாக்கித் தாமரையோன் ஆயுளா தலின் **தாமரை** என்று வகுத்தார்களோ என்னவோ !

பால்வரை கிளவியாகிய பின்னம் முதல் ஆம்ப லென்னும் பேரெண் வரையில் தமிழர்கள் உணர்ந்திருந் தனர் என்பதை எழுத்ததிகாரத்தின் மூலம் முன்னே சொன்ன அயல்நாட்டவர் தெரிந்துகொள்வார். நாமும் தெரிந்துகொள்ளத்தான் வேண்டும்.

## 18

# நெல்லும் பொன்னும்

தமிழ் நாட்டில் நெல்லுக்கும் மற்றத் தானியங்களுக்கும் குறைவே இல்லை. பழைய காலத்தில் பெரும்பாலும் பண்டமாற்ருகவே வியாபாரம் நடந்துவந்தது. தயிர், நெய், மற்றப் பொருள்கள் முதலியவற்றை விற்று நெல்லை விலையாகப் பெறுவது வழக்கம். அதிகமான விலையுள்ள பொருளாக இருந்தால் பொன்னை விலையாகப் பெறுவார்கள். நெல்லை முகந்து அளந்தும் பொன்னை நிறுத்தும் விற்பனை, வாங்குதல் எல்லாம் செய்து வந்தார்கள்.

அளவுகளுக்குள் அடிப்படையானது எண்ணல் அளவை. தொல்காப்பியர் மூலமாக முகத்தலளவை, நிறுத்தலளவை என்ற இரண்டு வகை அளவைகளைப் பற்றியும் சில செய்திகளைத் தெரிந்துகொள்ளலாம். அவர் காலத்தில் அளவுக்கும் நிறைக்கும் உரிய அளவைப் பெயர்கள் ஒன்பது எழுத்துக்களை ஆரம்பத்தில் உடையனவாக இருந்தன. க, ச, த, ப, ந, ம, வ, அ, உ என்ற ஒன்பது எழுத்துக்களையும் முதலாகப் பெற்ற பல அளவைகள் அக்காலத்தில் வழங்கிவந்தன.

> ‘ அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதல் ஆகி
> உளஎனப் பட்ட ஒன்பதிற் றெழுத்தே ;
> அவைதாம்—
> க ச த ப என்ரு ந ம வ என்ரு
> அகர உகரமொடு அவைஎன மொழிப ’

என்பது ஒரு சூத்திரம். 'முகத்தல் அளவைப் பெயர் களுக்கும் நிறுத்தல் அளவைப் பெயர்களுக்கும் உரிய முதல் எழுத்துக்களாகி, வழங்கும் வழக்கில் உள்ளன என்று எடுத்துச் சொல்லப்படுவன ஒன்பது எழுத்துக் கள்; அவை க-ச-த-ப என்பனவும் ந-ம-வ என்பன வும் அ-உ என்பனவும் ஆம் என்று புலவர்கள் சொல் வார்கள்' என்பது இதன் பொருள்.

இந்த ஒன்பது எழுத்துக்களையும் முதலாகக் கொண்டுவரும் அளவைப் பெயர்களை உரையாசிரியர் கள் காட்டியிருக்கிறார்கள்.

க—கலம்: இது இப்போதும் வழங்கி வருகிறது.

ச—சாடி: இப்போது வழக்கில் இல்லை.

த—தூதை, தூணி: வழக்கில் இல்லை.

ப—பனை, பானை, பதக்கு: பதக்கு என்பது மாத்திரம் சில இடங்களில் வழங்கி வருகிறது.

ந—நாழி: நாம் உபயோகிக்கும் படி.

ம—மண்டை: வழக்கில் இல்லை.

வ—வட்டி: வழக்கில் இல்லை.

அ—அகல்: வழக்கில் இல்லை.

உ—உழக்கு, உரி: உழக்கு என்பது மாத்திரம் வழங்கிவருகிறது.

இவற்றையன்றி ஆழாக்கு, குறுணி, செவிடு, மரக் கால், மிடா முதலிய அளவைப் பெயர்கள் பிற்காலத் தில் வழங்கலாயின. பானை, தூதை, அகல், மண்டை முதலியன பானையின் பலவகைகள். இப்பெயர்களைக் கொண்டு, பழங்காலத்தில் மண்ணால் ஆகிய அளவு கருவிகளே பெரும்பாலும் வழங்கிவந்தன என்று தெரிந்துகொள்ளலாம். இப்பெயர்கள் யாவும் தமிழ்ப்

பெயர்களாகவே இருத்தலின் தமிழர் வாழ்க்கையில் இந்த அளவைப் பெயர்களும் இவற்றை வழங்க நேரும் வாணிகத் துறையும் நல்ல நிலையைப் பெற்றிருந்தன என்று தெரிய வருகின்றது.

நிறுத்தலளவையிலும் பல அளவுப் பெயர்கள் இருக்கின்றன. இயற்கையில் விளைந்து முதிர்ந்த வித்துக் களையே முதல் முதலாக நிறுக்கும் அளவுகளாகக் கொண்டிருந்தார்கள் தமிழர்கள் என்று தெரிகிறது. தங்கத்தை நிறுக்கும் தட்டான் குன்றிமணியை இன்றும் பயன்படுத்துவதை நாம் அறிவோம். மஞ்சாடி என்பது ஒருவகை நிறை. பெருங்குன்றி மணிக்கு மஞ்சாடி என்று பெயர். சிரகம் என்பது ஒரு நிறையளவு. கழஞ்சு, தொடி, பலம், நிறை, மா, கா, அந்தை, வரை முதலியனவும் பழங்காலத்தில் வழங்கி வந்த நிறைகள்.

'தட்டான் காப்பொன்னிலும் மாப்பொன் திருடுவான்' என்ற பழமொழியில் வரும் **கா** என்பதும் **மா** என்பதும் நிறைப்பெயர்கள்.

'தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்தெரி வார்' என்ற திருக்குறளில் தினை என்றும் பனை என்றும் சொல்லப்படுவன உவமையாக வந்தவை அல்ல; அவை அளவுப் பெயர்களே. தினையென்பது மிகச் சிறிய அளவு; பனை யென்பது மிகப் பெரிய அளவு.

'**பனைஎன் அளவும் காஎன் நிறையும்**' என்று தொல்காப்பியத்தில் ஒரு சூத்திரம் வருகிறது. பனையென்பது அளவுப் பெயர், **கா** என்பது நிறைப்பெயர் என்று அதனாலும் தெரியவருகிறது.

ஒன்றிற் குறைந்த பின்ன அளவையை இக்காலத்தில் சொச்சம் என்று சொல்லுகிறோம். 'நாலு கலம் சொச்சம் நெல்' என்றால் நாலு கலமும் மேலே ஒரு கலத்துக்குக் குறைவான நெல்லும் என்று அர்த்தம் செய்துகொள்கிறோம். பழைய காலத்தில் இதையே 'நாலு கலக் கூறை' என்று சொல்லுவார்களாம். கூறை என்பது சொச்சம் என்ற அர்த்தத்தில், வரையறை தெரியாத பின்ன அளவையைக் குறித்து நிற்கும் சொல்.

பின்ன எண்களை முழு எண்களோடு சேர்த்துச் சொல்லும் முறையில் பழங்கால வழக்குக்கும் இக்கால வழக்குக்கும் ஒரு வித்தியாசம் இருக்கிறது. 'இரண்டரைக் கலம்' என்று இப்போது நாம் சொல்வதை அக்காலத்தில் 'இரண்டுகல அரை' என்று சொல்வார்கள். 'உழக்கரை' என்று இப்போது சொன்னால் நாம் என்ன பொருள் செய்துகொள்வோம். அரை உழக்கு என்றுதான் நாம் நினைப்போம். பழங் காலத்தில் ஒன்றரை உழக்கை அப்படிச் சொல்லி வந்தார்கள். உழக்கும் அதில் அரையும் சேர்ந்தது என்று அர்த்தம் பண்ணவேண்டும்.

தமிழில் உள்ள பாடல்களில் வெண்பா என்பது ஒருவகை. அதில் பலவகை உண்டு. திருக்குறள் என்ற இலக்கியம் முழுவதும் குறள் வெண்பா என்ற ஒரு வகைப் பாடல்களால் ஆனமையால்தான் அதற்கு அப் பெயர் வந்தது. குறள் வெண்பாவுக்கு இரண்டடிகளே உண்டு. அந்த இரண்டடிகளும் ஒரே அளவான அடிகள் அல்ல. முதல் அடி நாலு சீர்களை உடையது; இரண்டாவது அடி மூன்று சீர்களை உடையது. இரண்

டாவது அடியை முழு அடி என்று சொல்வதைக் காட்டிலும் முக்கால் அடி என்று சொல்வதுதான் பொருத்தம். ஆகவே குறள் வெண்பாவில் ஒன்றே முக்கால் அடிகள் இருக்கின்றன. ஒன்றே முக்கால் அடி என்றாலே குறள் வெண்பாவைக் குறிக்கும். பழைய காலத்தில் குறளை அப்படிக் குறிப்பிடுவதும் உண்டு. ஆனால் ஒன்றே முக்கால் அடி என்று சொல்லாமல், அக்காலத்து வழக்கப்படி ஓரடி முக்கால் என்று குறிப்பிட்டார்கள். மூன்று முழு அடியும் ஒரு முக்கால் அடியும் உள்ள வெண்பாக்களை மூவடி முக்கால் என்று வழங்கினார்கள்.

'செவிடு' என்ற பெயர் நம்முடைய காலத்தில் 'காது இல்லாதவன் செவிடன்' என்ற பாலர் பாட வாக்கியத்தைத்தான் நினைப்பூட்டும். அக்காலத்தில் செவிடு என்பது ஒருவகை முகத்தல் அளவைப் பெயராக வழங்கிவந்தது. ஆழாக்கில் ஐந்தில் ஒரு பங்குக்குச் செவிடு என்று பெயர்.

இன்று படியும் படிக்கல்லும் வழங்கும் வியாபாரத்தில் தொல்காப்பியர் காலத்தில் உழக்கு முதலிய அளவுகளும் தொடி முதலிய நிறைகளும் வழங்கின. அக்காலத்துத் தமிழர்கள் நெல்லையும் முத்தையும் முகந்து கணக்கிட்டார்கள். பொன்னையும் வெள்ளியையும் நிறுத்து அளந்தார்கள். இந்த இரண்டு அளவைகளும் அங்காடியில் வழங்கின ; அதனால் இலக்கியத்தில் புகுந்தன ; அந்தக் காரணத்தால் இலக்கணத்திலும் புகுந்துகொண்டன.

## 19

# தந்தையும் மகனும்

கல்யாண காலத்தில் எவ்வளவோ மந்திரங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றின் பொருள் நமக்குத் தெரியாமையால் அவை வெறும் சப்தமாய்ச் சம்பிரதாயமாய்ச் சடங்காய்க் கழிகின்றன. வாழ்க்கையில் கணவனும் மனைவியும் எப்படி எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை அந்த மந்திரங்கள் சொல்கின்றன.

ஒரு மணமகளை மணமகனுக்கு மணம் செய்து அளிக்கும்போது, 'இன்ன பெயருடைய பெண்ணை இன்ன பெயருடைய வரனுக்கு அளிக்கின்றேன்' என்று பெண்ணின் தகப்பனர் சொல்வது வழக்கம். அப்படிச் சொல்லும்போது அவ்விருவர்களுடைய பெயர்களை மாத்திரம் சொல்லி நிறுத்தாமல் அவர்களுக்கு முந்திய மூன்று தலை முறைப் பெரியார்களின் பெயர்களையும் சொல்லித் தாரை வார்த்தல் வழக்கம். இந்த வழக்கத்தை நினைத்துத்தான் கம்பர் சூர்ப்பணகையின் கூற்ருக ஒரு பாட்டுப் பாடுகிருர் போலும். ராமனைக் கண்டு மோகம் கொண்ட சூர்ப்பணகையை அவன், 'நீ யார்?' என்று வினவுகிருன். அதற்கு அவள் தன் பெயரைச் சொல்லவில்லை; தன் தந்தையைச் சொல்வதோடு நிற்கவில்லை; மூன்று தலைமுறையைச் சுட்டிச் சொல்கிருள்:

'பூவிலோன் புதல்வன் மைந்தன் புதல்வி'

என்று சொல்வதாகக் கவி அமைக்கிறார்.

கல்யாணத்தில் இங்ஙனம் வழங்கும் வழக்கத்தோடு, ஈமக்கடன்களிலும் மூன்று தலைமுறையை நினைத்து நீர்க்கடன் இறுக்கும் மரபு இந்நாட்டில் இருக்கிறது.

சாதாரண வழக்கில் இன்னாருடைய பிள்ளை இன்னாரென்று குறிப்பிக்கும் அடையாளங்கள் எல்லா மொழிகளிலும் இருக்கின்றன. இயற்பெயர், தந்தை பெயர், குலப்பெயர் என்ற முறையில் சில பாஷைகளில் பெயர் வழங்கும். ஈற்றிலே வரும் பெயர்கள் குலப்பெயரைக் குறிப்பதை உலகத்துப் பாஷைகள் பலவற்றிலே காணலாம். தனவணிகர் நாட்டில் தங்கள் பெயர்களுக்கு முன்னால் தந்தை, பாட்டனார் ஆகியோர் பெயரின் முதலெழுத்தை விலாசமாக வைத்துக்கொள்ளும் பழக்கம் இருந்து வருகிறது.

ஊர்ப்பெயர், தந்தைபெயர் என்ற இரண்டின் முதலெழுத்துக்களையும் நம் பெயருக்கு அடையாள முன்னெழுத்தாகக் கொள்ளும் வழக்கம் இக்காலத்தில் இங்கே எங்கும் பரவியிருக்கிறது.

தொல்காப்பியர் வாழ்ந்த காலத்தில் இன்னாருடைய மகன் இன்னார் என்று வழங்கும் வழக்கம் இருந்து வந்தது. தந்தையின் முழுப் பெயரையும் சொல்லி அதன் பின்னர் மகனது பெயரைச் சொன்னார்கள். அப்படி வரும்போது சில மாறுபாடுகள் உண்டாகும். கொற்றன் என்னும் பெயருடையவனுக்குச் சாத்

தன் என்ற பெயருடைய பிள்ளை இருக்கிறான். கொற்றன் மகன் சாத்தன் என்று சொல்வதைச் சுருக்கிச் சொல்லும்போது கொற்றன் + சாத்தன் என்று சொல்லலாம். அது கொற்றஞ் சாத்தன் என்று வழங்கும். சாத்தன் மகன் கொற்றன் என்பதைச் சாத்தங் கொற்றன் என்று சொல்லி வந்தார்கள்.

பிள்ளையின் பெயரைச் சொல்லாமலே தகப்பனுடைய பெயருக்குச் சில குறிப்புச் சேர்த்து மகனைக் குறிக்கும் வழக்கு வேறு பாஷைகளில் இருக்கின்றன. ஆர்தர் என்பவனுடைய பிள்ளை என்பதை ஸ்காட்டிஷ் பாஷையில் 'மாக் - ஆர்தர்' (Mac Arthur) என்று சொல்வார்கள். வடமொழியில் தந்தை பெயராலும் தாயின் பெயராலும் மகனை வழங்கும் வழக்கு உண்டு. தசரதனுடைய பிள்ளையைத் தாசரதி என்றும் குந்தியின் குமரனைக் கௌந்தேயனென்றும் சொல்வார்கள். ஜனகன் மகள் ஜானகி ; பர்வதத்தின் புதல்வி பார்வதி. தமிழில் இத்தகைய வழக்கு இருந்ததாகத் தெரியவில்லை.

ஆனால் வேறு ஒரு வழக்கு இங்கே இருந்ததென்று தொல்காப்பியத்தால் தெரியவருகிறது. தந்தை பெயரைக் கொண்டு மகனைக் குறிப்பதற்கு மாறாக மகன் பெயரைக்கொண்டு தந்தையைக் குறிக்கும் மரபு தமிழில் இருந்தது. அந்தப் பெயரைச் சொன்னால் இன்னானுடைய தந்தை என்று தெரியுமே ஒழிய அந்தத் தந்தையின் பெயர் இன்னதென்று தெரியாது. பிள்ளை புகழ்பெற்றவனாக இருந்து, அவனுக்குத் தந்தை என்ற முறையால் சிறப்புப் பெற்றவர்களைக் குறிக்க இப்படி ஒரு வழக்கம் உண்டாயிருக்கலாம்.

'ஆந்தை' என்ற பெயர் பழைய காலத்தில் மனிதர் களுக்கு வழங்கி வந்தது. கோட்டானில் ஒரு ஜாதிக்குப் பெயராகிய அது மனிதனுக்கு எப்படி வந்தது என்று நீங்கள் யோசிக்கலாம்; ஆந்தைபோல இருப்பார்க ளென்று வியாக்கியானம் செய்யலாம். அதெல்லாம் காரணம் அன்று. தொல்காப்பியர் காலத்தில், 'ஆந்தை' என்று ஒருவனை அழைத்தால் அவனுக்கு நிச்சயமாகப் பிள்ளை இருக்கிறான் என்று தெரிந்துகொள்ளலாம். அந்தப் பிள்ளையின் பெயர் ஆதன் என்றும் தெளிய லாம். ஆம்; அந்த மனிதன் ஆதன் தந்தை. அவனை அவனுடைய மகனது பெயரைக் கொண்டு குறிப்பித் தார்கள். ஆதன் தந்தை என்பது ஆந்தை என்று மாறும். இப்படியே பூதன் தந்தைக்குப் 'பூந்தை' என்று பெயர் வந்தது. சாத்தன் தந்தையைச் சாத் தந்தை என்று அழைத்தார்கள்.

**'இயற்பெயர் முன்னர்த் தந்தை முறைவரின்**
**முதற்கண் மெய்கெட அகரம் நிலையும்**
**மெய்ஒழித்து அன்கெடும் அவ்வியற் பெயரே'**

என்பது ஒரு தொல்காப்பியச் சூத்திரம். சொந்தமாக வைத்துக்கொண்ட பெயருக்குப் பிறகு தந்தை என்று உறவின் முறையைக் குறிக்கும் பெயர் வந்தால், தந்தை என்ற பெயரில் முதலில் உள்ள 'த்' என்ற எழுத்து ஓடிப்போக அந்தை என்று நிற்கும். சொந்தப் பெய ரின் கடைசியில் 'அன்' என்றுள்ள பாகம் மறைந்து போகும். சாத்தன் என்பது சொந்தப் பெயரானல் 'அன்' போக **சாத்த்** என்று நிற்கும். அதற்கு மேல் 'அந்தை' வந்து சேர்ந்தால் **சாத்தந்தை** என்று ஆகிவிடும். எது குறைகிறதோ, எது கூடுகிறதோ, அதைப் பற்றி

நாம் அதிகமாக மண்டையை உடைத்துக்கொள்ள வேண்டாம். சாத்தன் தந்தையைச் சாத்தந்தை என்றும் கண்ணன் தந்தையைக் கண்ணந்தை என்றும் வழங்குவார்கள் என்பதை இந்தச் சூத்திரம் தெரிவிக்கிறது. இதை மாத்திரம் நாம் உணர்ந்துகொள்வது போதும்.

ஆந்தை, பூந்தை என்னும் விசித்திரமான பெயர்களைப்பற்றி அடுத்த சூத்திரம் சொல்கிறது :

**'ஆதனும் பூதனும் கூறிய இயல்பொடு**
**பெயர்ஒற்று அகரம் துவரக் கெடுமே.'**

முன் சூத்திரப்படி ஆதன் தந்தை என்பது ஆதந்தை என்றல்லவா வரவேண்டும்? அது பின்னும் குறைவதை இச்சூத்திரம் சொல்கிறது ஆந்தை என்றும் பூந்தை என்றும் வருவதற்கு இன்ன மாறுபாடுகள் நிகழ்கின்றன என்று இது தெரிவிக்கிறது.

தந்தை, மகன் என்ற முறைகளைக் குறிக்கும் இந்த வழக்குகளை இலக்கணத்தின் மூலமாக அறிவதோடு சில புலவர்களின் பெயர்களைக் கொண்டும் அறியலாம். திருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் என்று கடைச்சங்க காலத்தில் ஒரு புலவர் இருந்தார். அவர் பெயரைக் கொண்டு அவருடைய ஊர் திருக்காட்டூரென்று தெரிகிறது; அவர் தகப்பனார் பெயர் தாயன் என்று தெரிய வருகிறது; கண்ணனார் என்பது அவர் சொந்தப் பெயர். நக்கீரர் என்ற பெயர் பெற்ற புலவருக்குக் கொற்றனார் என்ற குமாரர் இருந்தார். 'கீரன் மகன் கொற்றன்' என்று தெரிந்துகொள்ளும்படி அவர் பெயர் கீரங்கொற்றனார்' என்று வழங்கி வந்தது.

பழங்காலத்துத் தமிழ்ப் பெயர்கள் நமக்கு வேடிக்கையாக இருக்கும். கொற்றன், சாத்தன், தேவன், பூதன் என்பன போன்ற பெயர்களைப் பழங் காலத்தில் வைத்துக்கொண்டார்கள். அழான், புழான் என்றெல்லாம் பெயர்கள் வருகின்றன. தொல் காப்பியர் சூத்திரத்தில் ஆதன் பூதன் என்ற பெயர் களைக் குறிக்கின்றார். அவற்றோடு தான், பேன், கோன் என்ற பெயர்கள் மக்களுடைய பெயர்களாக வழங்கி வந்தன என்று பின்வரும் சூத்திரத்தால் தெரிகிறது:

> 'தானும் பேனும் கோனும் என்னும்
> ஆமுறை இயற்பெயர் திரிபிடன் இலவே.'

# 20

# பல வகைச் செய்திகள்

## 'தாக்கோல்'

ஒரு மலையாள நம்பூதிரி வெளியூருக்கு ஒரு நாள் போயிருந்தான். அன்றிரவு அவன் வீட்டில் திருடன் வந்து பெட்டியைத் திருடிக்கொண்டு போய்விட்டான். அவன் மீண்டு வந்தபோது ஒருவர், 'உன் வீட்டில் திருடன் புகுந்து பெட்டியை அடித்துக் கொண்டு போய்விட்டான்' என்றார். கேட்ட நம்பூதிரி, 'பரவாயில்லை. 'தாக்கோல்' என்னிடம் இருக்கிறது. அவன் அதைத் திறக்க என்னிடந்தான் வந்தாக வேண்டும்' என்று சொன்னானாம். நம்பூதிரியின் மடமையைக் காட்ட இந்தக் கதையைச் சொல்வார்கள். தாக்கோல் என்பது சாவிக்குப் பெயர். நாம் திறவுகோல் என்று வழங்குவதைப்போல் மலையாளத்தில் 'தாக்கோல்' என்று சொல்லுகிறார்கள்.

'தாக்கோல்' என்பது தமிழ்ச் சொல்தான். அது முன் காலத்தில் இந்நாட்டில் வழங்கி வந்தது. நாளடைவில் வழக்கு ஒழிந்தது.

மலையாள மொழி தமிழிலிருந்து பிரிந்தது. அதில் பழங்காலத்தில் தமிழில் வழங்கி வந்த வழக்குகள் பலவற்றைக் காணலாம். தொல்காப்பியர் காலத்தில் மலையாள மொழி தனியாக உண்டாகவில்லை. மலையாள நாடு அக்காலத்தில் தமிழ் நாடாகவே இருந்தது. மலை

நாடு என்று வழங்கி வந்தார்கள். அது பிறகு மலை ஞாலம் (ஞாலம் - பூமி) என்றாகி நாளடைவில் **மலையாளம்** ஆகிவிட்டது.

தாக்கோல் என்பதன் பண்டை உருவம் **தாழக்கோல்**. தாழைத் திறக்கும் கோல் என்பது பொருள். பழங்காலத்தில் பூட்டு இல்லையென்றே தெரிகிறது. கதவுகளின் தாழை வெளியிலிருந்தே ஒரு திறவுகோலைக் கொண்டு தள்ளிப் பூட்டும் வழக்கம் இருந்தது. இன்னும் கிராமங்களில் கதவுகளில் இதற்கேற்ற துவாரமும் திறவுகோலும் இருப்பதைக் காணலாம். தாழைத் திறப்பதற்கும் போடுவதற்கும் உதவும் கோல் தாழ்+கோல்; அது தாழக்கோல் என்று ஆயிற்று. தொல்காப்பியர் காலத்தில் தாழக்கோல் வழங்கி வந்தது. தாழ், கோல் என்னும் இரண்டும் சேர்ந்தால் தாழக்கோல் என்று ஆவதற்கு அவர் இலக்கணம் சொல்கிறார்.

## சூது விளையாட்டு

**த**மிழர்கள் அவர் காலத்தில் பொழுது போக்குக்குப் பல விளையாட்டுக்களை விளையாடி வந்தார்கள். சதுரங்கம் போன்ற சூதாட்டம் ஒன்றை அவர்கள் ஆடினார்கள். அதை **வல்** என்று சொல்லிவந்தார்கள். பலகையில் கட்டம் கிழித்து ஆடும் விளையாட்டு அது. அந்தப் பலகைக்கு வல்லப் பலகை என்று பெயர். அவ் விளையாட்டில் உபயோகப்படும் காய்களை **நாய்** என்று வழங்கினர். இப்பொழுதும் கட்ட விளையாட்டில் காய்களை நாய் என்று சொல்வது உண்டு. **வல்** என்ற சொல் வாக்கியத்தில் வரும்போது **வல்லு** என்று வரும்; 'வல்லு நீண்டது' என்றால் விளையாட்டு வெகு நேரம்

நீண்டுவிட்டது என்று பொருள். நாய், பலகை என்பனவற்றோடு சேர்ந்தால் வல்லநாய், வல்லப்பலகை என்று வரும். இந்த இரண்டு வழக்கிற்கும் தொல்காப்பியர் இலக்கணம் சொல்கிறார். அதனால் நமக்கு அக்காலத்தில் வல்லாடும் பழக்கம் இருந்த செய்தி தெரியவருகிறது.

## நாளும் கோளும்

தமிழர் வானசாஸ்திர அறிவு படைத்திருந்தார்கள். வானில் உலவும் கிரகங்களைக் கோளென்றும், இன்ன காலத்தில் இன்ன இடத்தில் வரும் என்ற வரையறையும் அசுவினி முதலிய பெயர்களையும் உடையவற்றை நாள் என்றும், மற்ற நக்ஷத்திரங்களை மீன் என்றும் வழங்கினர். அரசர்களுடைய அரண்மனையில் நாளும் கோளும் ஆராய்ந்து, வருவன உரைக்கும் சோதிடன் மந்திரிக் கூட்டத்தாரோடு சேர்ந்திருந்தான். அவனைக் கணி என்ற பெயரால் அழைத்தார்கள். பழங்காலத்துப் புலவர்களிற் பலர் சோதிடத்தில் வன்மை பெற்றவர்களாக இருந்தார்கள். கணி மேதாவியார் என்று கடைச் சங்க காலத்தில் ஒரு தமிழ்ப் புலவர் இருந்தார். அவர் சொந்தப் பெயர் மேதாவியார் என்பது; கணிதநூல் வல்லவராதலின் கணி என்ற பட்டம் அவருக்கு உரியதாயிற்று. கணியன் பூங்குன்றன் என்ற புலவரும் சோதிடரே. நல்ல நாள் பார்த்தல், நிமித்தம் பார்த்தல் முதலிய வழக்கங்கள் இந்நாட்டில் இன்று நேற்று வந்தனவல்ல; பல நூற்றாண்டுகளாக இங்கே இருக்கின்றன. பேச்சு வழக்கிலும் இலக்கியத்திலும் நக்ஷத்திரங்களை அடிக்கடி

உபயோகிக்கும் சந்தர்ப்பங்கள் தமிழர்களிடம் நிரம்ப இருந்தன. அதனால் அந்தப் பிரயோகத்திற்கு இலக்கணம் வகுக்கவேண்டியது தொல்காப்பியர் கடமையாயிற்று. நட்சத்திரத்தின் பெயரை வாக்கியத்தில் உபயோகப்படுத்தும்போது இன்னபடி அதன் உருவம் மாறும் என்று சொல்கிறார் அப்படிச் சில சூத்திரங்கள் வருகின்றன.

பரணி நட்சத்திரத்தில் ஒரு பொருளைத் தந்தான் என்று சொல்லவேண்டுமானால், '**பரணியாற் றந்தான்**' என்று சொல்வது பழைய வழக்கம். சித்திரை என்பது ஒரு நட்சத்திரத்திற்கும் பெயர்; மாதத்திற்கும் பெயர். வாக்கியத்தில் அவைகளை உபயோகப்படுத்தும் விதத்திலிருந்து மாதமா, நட்சத்திரமா என்று தெரிந்து கொள்ளலாம். 'சித்திரையாற் கொண்டான்' என்றால் சித்திரை நட்சத்திரத்தில் வாங்கிக் கொண்டான் என்று தெரிந்துகொள்ள வேண்டும்; 'சித்திரைக்குக் கொண்டான்' என்றால் சித்திரை மாதத்தில் வாங்கிக் கொண்டான் என்று பொருள் கொள்ளவேண்டும். இந்த மாதிரி வழக்கெல்லாம் இப்போது போய் விட்டன. காலத்துக்கு ஏற்றபடி சில வழக்கங்கள் மாறுவது இயல்பே.

தொழிலுக்குக் **கம்** என்று ஒரு பெயர் முன் வழங்கி வந்தது. அவ்விடம், இவ்விடம் என்ற அர்த்தத்தில் அதோளி, இதோளி, ஆன், ஈன் என்ற பதங்களை முன் காலத்தில் உபயோகித்து வந்தார்கள்.

பனையிலிருந்து வெல்லம் எடுப்பது இந்நாட்டின் காலங்கண்ட தொழில். இப்போது பனங்கருப்பட்டி என்று வழங்குவதை அக்காலத்தில் பனாட்டு என்று

குறித்தார்கள். காய்ச்சி எடுத்தது என்ற பொருளை யுடையது அட்டு என்ற சொல். பனையிலிருந்து பெறப் படும் அட்டு பனாட்டு.

## பனைக்கொடி

பனைக்கொடி என்ற தொடரின் இலக்கணம் ஒரு சூத்திரத்தில் வருகிறது. பனையைத் துவஜத்தில் எழுதித் தம்முடைய அடையாளமாக வைத்துக் கொண்ட ஒரு கூட்டத்தினர் பழங்காலத்தில் இருந் திருக்கவேண்டும். பலராமனுக்குப் பனைக்கொடி என்று பழஞ் சங்கநூல்கள் கூறுகின்றன. பலராமன் பாரத காலத்தில் இருந்தவன். தொல்காப்பியம் பாரதகாலத் திற்கு முன்பே இயற்றப்பட்டது என்று ஆராய்ச்சிக் காரர்கள் சொல்கிறார்கள். நச்சினார்க்கினியர் என்ற உரையாசிரியர், வேதவியாசர் வேதத்தைப் பிரிப்பதற்கு முன்பே தொல்காப்பியம் இருந்தது என்று எழுதுகிறார். பனைக்கொடி பலராமனது கொடியாக இருந்தால் தொல்காப்பியம் பாரத காலத்துக்கு முந்தியது என்று சொல்லுதல் தவறாகிவிடும். ஒரு கொடியை மன்னன் ஒருவன் ஏந்துவதென்றால், அது பரம்பரையாக வந்த தாக இருக்கவேண்டும். பலராமனுக்கு முன்னும் பாரத தேசத்தில் பனைக்கொடியை உடைய மன்னர் இருந்தனரென்றும் அவர்களைப் பற்றிய செய்திகள் தமிழ் நாட்டில் வழங்கினவென்றும் ஊகிப்பது தொல் காப்பியத்தின் பழமைக்குப் பொருத்தமாக இருக்கும்.

எழுத்ததிகாரத்தில் புணர்ச்சி இலக்கணத்தைச் சொல்லும் சூத்திரங்களிலிருந்தே இவ்வளவு செய்தி கள் நமக்குத் தெரிய வருகின்றன.

# உள்ளுறை

இதுகாறும் தொல்காப்பியத்தில் எழுத்ததிகாரத்தில் உள்ள சூத்திரங்களின் மூலமாகப் பழந்தமிழர் வாழ்க்கையைப் பற்றியும், அவர்களுடைய கருத்து, வழக்கம் முதலியவற்றைப் பற்றியும் அறிந்துகொள்வதற்குரிய செய்திகள் இன்னவை என்று ஒருவாறு ஆராய்ந்தோம். இனி அந்நூலில் கூறியுள்ள இலக்கணச் செய்திகளில் முக்கியமானவற்றை அதில் உள்ள முறைப்படியே பார்க்கலாம்.

தொல்காப்பியத்தின் தொடக்கத்தில் தொல்காப்பியரோடு தோழமை பூண்டு கல்வி கற்ற பனம்பாரனார் என்பவர் இயற்றியதாகச் சொல்லும் சிறப்புப்பாயிரம் ஒன்று இருக்கிறது. அதனால் தொல்காப்பியம் நிலந்தரு திருவிற் பாண்டியன் காலத்தில் இயற்றப்பட்டதென்று தெரிய வருகிறது. தொல்காப்பிய முனிவர் தவவிரதமுடையவர். சிலர் அவரைச் சைனரென்று சொல்வர்.

எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற மூன்று பகுப்பையுடையது தொல்காப்பியம். எழுத்தைப் பற்றிய இலக்கணச் செய்திகளைச் சொல்வது எழுத்ததிகாரம்.

இந்த அதிகாரத்தில் ஒன்பது இயல்களாகிய சிறு பிரிவுகள் இருக்கின்றன. எழுத்துக்களைப் பற்றிய பொது இலக்கணத்தைச் சொல்லும் பிரிவு முதலில் இருக்கிறது. இதற்கு 'நூல் மரபு' என்று பெயர். இதில் உள்ள செய்திகள் இந்த அதிகாரத்துக்கு மட்டுமல்லாமல் பிற அதிகாரங்களுக்கும் பயன்படும். எனவே

நூல் முழுவதற்கும் பயன்படும் இலக்கணத்தைச் சொல்வதனால் 'நூல் மரபு' என்ற பெயர் வைத்திருக்கிறார். நூல் என்பது இலக்கண நூல்; மரபு என்பது இலக்கண விதிகள். 'இத்தொல்காப்பிய மென்னும் நூற்கு மரபாந்துணைக்கு வேண்டுவனவற்றைத் தொகுத்து உணர்த்தினமையின் நூன்மரபென்னும் பெயர்த்தாயிற்று' என்று நச்சினார்க்கினியர் எழுதுகிறார். இதில் உள்ள சூத்திரங்கள் 33.

இப்பகுதியில் எழுத்துக்களின் பெயர், வரிசை, வகை, மாத்திரை, குறுகிய எழுத்துக்கள், புள்ளி பெறும் எழுத்துக்கள், இன்ன எழுத்துக்குப்பின் இன்ன எழுத்து வரும் என்பது, சுட்டு வினா எழுத்துக்கள், சங்கீதத்தில் எழுத்தின் ஓசை அதிகமாக ஒலித்தல்—என்ற செய்திகள் வருகின்றன.

இரண்டாவது பிரிவு 'மொழி மரபு' என்பது. வார்த்தைகளிலே வரும்போது எழுத்தின் அமைப்பு எப்படி இருக்கும் என்பதைச் சொல்லும் பகுதி இது. 'மேல் எழுத்து உணர்த்திப் பின் அவை தம்மின் தொடருமாறும் உணர்த்தி அவ்வெழுத்தான் ஆம் மொழியது மரபு உணர்த்துகின்றமையின் இவ்வோத்து மொழி மரபெனக் காரணப் பெயர்த்தாயிற்று' என்பது நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம். இதில் உள்ள சூத்திரங்கள் 49.

இதில் குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம், உயிரளபெடை, ஓரெழுத் தொருமொழி, ஈரெழுத் தொருமொழி, தொடர்மொழி, மகரக் குறுக்கம், எழுத்துப்போலி, மொழிக்கு முதலாகும் எழுத்துக்கள், மொழியின் இறுதியில் வரும் எழுத்துக்கள் என்பவை பற்றிய இலக்கணங்கள் உள்ளன.

தொல்காப்பியர் காலத்தில் ச, சை, சௌ என்ற எழுத்துக்களில் தொடங்கும் சொற்கள் இல்லை என்பதும், ஞ, ஞெ, ஞொ என்ற மூன்றை அல்லாமல் ஞா முதலிய பிற ஞகர வர்க்க எழுத்துக்களை முதலாக உடைய தமிழ் வார்த்தைகள் வழங்கவில்லை என்பதும், யகர வருக்கத்தில் யா என்பது ஒன்றுதான் தமிழ்ச் சொல்லில் முதலில் வருமென்பதும் சில சூத்திரங்களால் தெரிய வருகின்றன. உசு, முசு என்ற இரண்டு வார்த்தைகளே சு என்ற முற்றுகரத்தை இறுதியிலே பெறுவன என்றும், பு என்ற முற்றுகரத்தை ஈறுகவுடைய சொல் தபு என்ற ஒன்றே என்றும், பொருந், வெரிந் என்ற இரண்டுமே ந் என்று முடியுமென்றும், உரிஞ் என்ற ஒன்றே ஞகரத்தில் முடிவதென்றும், வகரத்தில் முடிவன அவ், இவ், உவ், தெவ் என்ற நான்கு மொழிகளே என்றும், மகரம் திரிந்த னகரம் இன்றி இயற்கையாகவே னகர ஈறுக முடியும் அஃறிணைச் சொற்கள் ஒன்பது என்றும் (எகின், செகின், விழன், பயின், குயின், அழன், புழன், கடான், வயான்) சில சூத்திரங்கள் புலப்படுத்துகின்றன.

மூன்றாவது 'பிறப்பியல்' இன்ன இன்ன உறுப்புக்கள் இன்ன இன்னவாறு தொழிற்படுவதால் எழுத்துக்களின் ஒலி உண்டாகுமென்பதைச் சொல்வது. இதில் 20 சூத்திரங்கள் உள்ளன.

உந்தியில் தோன்றிய உதானன் என்னும் வளி யானது தலை, தொண்டை, நெஞ்சு என்ற இடங்களில் வந்து தங்கிப் பல், இதழ், நாக்கு, மூக்கு, மேல்வாய் என்ற உறுப்புக்களின் தொழிலால் எழுத்துக்களாக ஒலிக்கும் என்பதும், இன்ன இன்ன இடத்தில் இன்ன இன்ன எழுத்துக்கள் பிறக்கும் என்பதும், இன்ன இன்ன எழுத்து இன்ன இன்ன உறுப்புக்களின் முயற்சியால் தோற்றும் என்பதும் இப்பகுதியில் வரும் செய்திகள்.

ஒரு சூத்திரத்தில், 'ஆசிரியன் முந்திய நூலில் எல்லா எழுத்துக்களும் பிறக்கும் விதத்தைக் கூறி வெளிப்படுத்தியதனால், யானும் அவ்வாறே எண்வகை யிடத்திலும் எழுத்துக்கள் பிறப்பதைக் கூறினேன். அப்படி யான் கூறினவாறன்றி உந்தியில் தோற்றும் காற்றானது வேறுபட்டு மாத்திரை அதிகமாவதும், மூலாதாரத்தில் எழுகின்ற காற்றின் ஓசையை நாடித் தெரிந்துகொள்வதும் அந்தணர்களின் வேதத்திலிருந்து உணர்ந்து கொள்வதற்குரியன. அவற்றை இங்கே சொல்லாமல், உந்தியில் தோன்றிப் புறத்தே வெளிப்படையாக ஒலித்துப் பொருள் தெரிந்துகொள்ள ஏதுவாக இருக்கும் காற்றுக்கே அளவு கூறினேன்' என்று தொல்காப்பியர் சொல்லுகிறார்.

'**புணரியல்**' என்பது நான்காவது பிரிவு. வார்த்தையும் வார்த்தையும் சேரும்போது என்ன நிகழும் என்பதைப் பொதுவாகச் சொல்வது இது. 'மொழி மரபிற் கூறிய மொழிகளைப் பொதுவகையாற் புணர்க்கும் முறைமையை உணர்த்தினமையின் இப்பெயர் வந்ததெ'ன்று நச்சினார்க்கினியர் காரணம் கூறுவர். இதில் உள்ள சூத்திரங்கள், 40.

வார்த்தைகளின் முதலும் ஈறுமாகிய எழுத்துக்கள் மெய், உயிர் என்பதும், இரண்டு சொற்கள் சேரும் போது முதல் வார்த்தையின் இறுதி எழுத்தும் இரண்டாவது மொழியின் முதல் எழுத்தும் சேருமென்பதும், அப்படிச் சேருகையில் இயற்கையாகவோ மூன்று வகையான வேறுபாடு பெற்றோ நிற்கும் என்ற செய்தியும், இன்ன இன்ன வார்த்தைகள் புணர்வதற்குரியன என்பதும், வேற்றுமை உருபுகளும் புணர்ச்சியில் அவை பெறும் மாறுபாடுகளும் இன்ன என்பதும், உருபுகள் வந்து சேரும்போது இடையே தோன்றும் சாரியைகள் இன்ன என்பதும், அந்தச் சாரியைகள் புணர்ச்சியில் இன்ன

இன்ன வேறுபாடுகளை அடையும் என்பதும் இதில் வரும் செய்திகள்.

இரண்டு வார்த்தைகள் சேரும்போது முதலில் நிற்கும் சொல் நிறுத்த சொல்லென்றும். வந்து சேரும் சொல் குறித்துவரு கிளவி என்றும் வழங்கும் என்பது ஒரு சூத்திரத்தால் தெரிகிறது. ஒரு சூத்திரம் நட்சத்திரப் பெயர் உருபோடு சேர்வதற்கு இலக்கணம் கூறுகிறது. ஒரே எழுத்துக்களையுடைய தொடர்மொழிகள் ஓசை வேறுபாட்டால் வெவ்வேறு மொழிகளாகப் பிரிக்கப் பெறும் என்ற செய்தி ஓரிடத்தில் வருகிறது. குன்றேருமா என்பதைக் குன்று ஏரு(த) மா என்றும், குன்று ஏறு ஆமா என்றும் பிரிப்பதைப்போல அத்தொடர்கள் பிரிக்கப் பெறும்.

'**தொகைமரபு**' என்னும் ஐந்தாவது இயல், இன்ன இறுதியுடைய சொல் புணர்ச்சியில் இப்படி முடியுமென்ற இலக்கணத்தைச் சொல்வது. பல சூத்திரங்களால் தனித்தனியே சொல்லவேண்டியவற்றைத் தொகுத்துச் சுருக்கிச் சொல்வதனால் இப்பெயர் அமைந்தது. சூத்திரங்கள் 30.

அதோளி, இதோளி, உதோளி, (அங்கே, இங்கே. உங்கே), எதோளி (எங்கே) என்ற சொற்கள் வரும் வார்த்தையோடு சேரும்பொழுது உண்டாகும் மாற்றம் ஓரிடத்தில் கூறப்பெறுகிறது. அளவுப் பெயர், நிறைப் பெயர், எண்ணிக்கைப் பெயர்கள் தமக்கு உட்பட்டவற்றைக் குறிக்கும் சொல் வந்தால் இடையிலே ஏகாரம் தோன்றுமாம். (**உ—ம்.**) உழக்கே யாழாக்கு, கழஞ்சே குன்றுமணி, ஒன்றேகால். இவற்றுக்கு உழக்கும் ஆழாக்குமாகிய அளவு, கழஞ்சும் குன்றுமணியுமாகிய எடை, ஒன்றும் காலும் என்று பொருள் கொள்ளவேண்டும். அரை என்பது வந்தால் ஏகாரம் வராது. (**உ—ம்.**)

உழக்கரை—ஒன்றரை உழக்கு. குறையென்ற சொல் சொச்சத்தைக் குறிப்பது. காணியும் குறையும் என்ற பொருளில் காணிக்குறை என்பது வரும். கலம், பனை, கா என்ற சொற்கள் சம்பந்தமான இலக்கணங்கள் சில சூத்திரங்களில் உள்ளன. அளவுக்கும் நிறைக்கும் உரிய பெயர்கள் க, ச, த, ப, ந, ம, வ, அ, உ என்ற ஒன்பது எழுத்துக்களையே முதலில் பெறுமென்று ஒரு சூத்திரம் சொல்கிறது.

ஆறுவது '**உருபியல்**' வேற்றுமை உருபுகள் பெயர்ச் சொல்லோடு சேரும் இலக்கணத்தைச் சொல்வது. இதில் உள்ள சூத்திரங்கள் 30.

இன்ன இன்ன உருபுகளுக்கு இன்ன இன்ன சாரியை வரும் என்று விரிவாகச் சொல்லும் பகுதி இது. அ, ஆ என்ற எழுத்துக்களை இறுதியாகக்கொண்ட மரப் பெயர்களுக்கு இலக்கணம் வகுக்கும் சூத்திரம் ஒன்று உண்டு. விளா, பலா முதலிய மரப்பெயர்களின் முடிபை இந்தச் சூத்திரத்தால் உணரலாம். கிழக்கு, மேற்கு. வடக்கு, தெற்கு என்னும் திசைப்பெயர் சம்பந்தமான இலக்கணம் ஒரு சூத்திரத்தில் வருகிறது.

'**உயிர் மயங்கியல்**' ஏழாவது பிரிவு. உயிரை இறுதியில் பெற்ற மொழிகளோடு பிற மொழிகள் வந்து சேரும் இலக்கணத்தை வகுப்பது இது. உயிர் பிறவற்றோடு கலக்கும் இலக்கணத்தைக் கூறுவது என்பது இத்தொடரின் பொருள். மயங்குதல்—புணர்தல். 93 சூத்திரங்கள் உள்ள பகுதி இது.

இதில் அகரம் முதல் ஔகாரம் வரையில் உள்ள உயிர் எழுத்துக்களில் ஒவ்வொன்றிலும் முடியும் சொற்களுக்குப் புணர்ச்சி இலக்கணம் சொல்லப்படுகிறது வல்லினம் இரட்டிக்கும் இடம், இயல்பாக நிற்கும் இடம் என்ற பகுப்புக்களை யெல்லாம் இதில் காணலாம்.

பதினொன்றுக்கு மேற்பட்ட மரப் பெயர்கள் இப்பகுதியில் வருகின்றன. வாழி என்று இப்போது வழங்கும் வாழ்த்துச் சொல்லுக்கு வாழிய என்பது மூலம் என்றும், மகவு என்ற சொல்லுக்கு மக என்பது மூலமென்றும், பசுவைக் குறிக்கும் ஆ என்ற சொல்லும் தசையைக் குறிக்கும் ஊ என்ற சொல்லும் ன் என்ற சாரியை பெற்று ஆன், ஊன் என வழங்குகின்றன என்றும், சாணத்துக்கு ஆப்பி என்னும் பெயர் அக்காலத்தில் வழங்கியதென்றும், நாழி என்பதும் உரி என்பதும் சேர்ந்து நாடுரி என்று ஆகும் என்றும், காற்றை ஐந்து பூதங்களில் ஒன்றாக வைக்கும் மரபு அக்காலத்திலேயே இருந்ததென்றும், நட்சத்திரத்தை நாளென்றும் மாதத்தைத் திங்களென்றும் கூறுவரென்றும், பனையிலிருந்து விளையும் வெல்லத்தை அட்டு என்பரென்றும், பனை அட்டு என்ற இரண்டு சொல்லும் சேர்ந்து பனாட்டு என ஆகுமென்றும், வேட்கை அவா என்ற இரண்டும் சேர்ந்து வேணவா என ஆகுமென்றும் புலப்படுத்தும் சூத்திரங்கள் இப்பகுதியில் இருக்கின்றன.

**'புள்ளி மயங்கியல்'** என்னும் எட்டாவது பிரிவு புள்ளி பெறும் மெய்யெழுத்துக்களை ஈற்றில் கொண்ட சொற்கள், வருமொழிகளோடு புணர்வதற்கு இலக்கணம் வகுப்பது; சூத்திரங்கள் 110.

மெய்யீறுகளை வரிசையாக எடுத்துக்கொண்டு ஒவ்வொன்றுக்கும் புணர்ச்சியில் உண்டாகும் வேறுபாடுகளைச் சொல்கின்ற பகுதி இது.

இப்பகுதியில் வரும் சில முக்கியமான செய்திகள்: ஆண் என்பது ஒரு மரம்; காயம் என்பது ஆகாயத்தைக் குறிக்கும் சொல்; எண் என்பது எள்ளுக்கு ஒரு பெயர்; அகம் கை என்ற இரண்டும் சேர்ந்தால் அங்கையென

ஆகும் ; நும் என்பது இயற்கையான சொல்; அதுவே திரிந்து நீயிர் என்று ஆகும்; தொழிலைக் குறிக்கும் பொதுச்சொல் கம் என்பது; ஆன் ஈன் என்பன அவ்விடம் இவ்விடம் என்பனவற்றைக் குறிப்பவை; பஞ்சுக்குப் பன் என்றும் உலோக வேலைக்குக் கன் என்றும் பெயர்கள் வழங்கின; ஆதன், பூதன், தான், பேன், கோன் என்பன மக்களுக்கு வழங்கும் பெயர்கள் ; மூன் இல் என்பன சேர்ந்து மூன்றில் என வரும்; பொன் என்பது செய்யுளில் பொலம் என்று ஆகும்; தந்தை பெயரோடு சார்த்தி மகன் பெயரைச் சொல்வது ஒரு வழக்கு; தமிழ் என்பது கூத்து முதலியவற்ரோடு சேர்ந்தால் அகரம் பெற்றுத் தமிழக் கூத்து என்பதுபோல வரும்; ஆயிரம், நூறுயிரம் என்ற எண்கள் வழக்கில் இருந்தன ; ஐ- அம்-பல் என்ற மூன்றி லும் முடியும் தாமரை வெள்ளம் ஆம்பல் என்பன பேரெண்கள் ; மக்கள் என்பது இயற்கையான சொல். இப்பகுதியில் பதின்மூன்று மரங்களின் பெயர்கள் வந்துள்ளன.

ஒன்பதாவது '**குற்றியலுகரப் புணரியல்**' குற்றியலு கரத்தில் முடியும் சொற்களோடு மற்றச் சொற்கள் வந்து சேரும்போது உண்டாகும் செய்கையை வகுப்பது. சூத் திரங்கள் 78.

குற்றியலுகரம் இத்தனை வகைப்படுமென்று கூறி ஒவ்வொரு வகையும் புணர்ச்சியில் முடியும் விதத்தைச் சொல்லி, ஒன்று முதலிய எண்கள் புணர்ச்சியில் எவ்வாறு முடியும் என்பதையும் விரிப்பது இப்பகுதி.

சில முக்கியமான செய்திகள் : பெண்டு என்பது பெண்ணைக் குறிக்க வழங்கும் ; வடகிழக்கு முதலிய கோணத் திசைகளின் பெயர்கள் அக்காலத்தும் வழங்கின ; ஒன்பது பத்து தொண்ணூறென்றும், ஒன்பது

நூறு தொள்ளாயிரமென்றும் ஆகும்; இலக்கணத்தால் வரையறுக்கப்படாத முடிபுகள் செய்யுளிலும் உலக வழக்கிலும் வருவதுண்டு.

இப்படியாக இந்த ஒன்பது இயல்களிலும், எழுத்து இன்னது, இத்தனை வகைப்படும் என்பதை உரைத்து, அவை சொல்லாகப் பயன்படுமாற்றைக் கூறி, அவை எவ்வாறு உச்சரிக்கப்படுமென்பதை விளக்கி, பிறகு வார்த்தையும் வார்த்தையும் ஒன்றுபடும்போது முதலில் நிற்கும் வார்த்தையின் இறுதியெழுத்தும் வந்து சேரும் மொழியின் முதலெழுத்தும் சேரும் முறையைப் பொதுவாகவும், ஈற்றெழுத்தைக் கொண்டு வகைப்படுத்திச் சிறப்பாகவும் விளக்கித் தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தை நிறைவேற்றுகிறார்.

எழுத்ததிகாரத்தில் உள்ள மொத்தச் சூத்திரங்கள்: 483.

## எழுத்ததிகாரத்தில் வந்துள்ள சொற்கள்

### மரப்பெயர்கள்

| | |
|---|---|
| அரை | காழ்—விதை |
| ஆண் | குமிழ் |
| ஆர்—ஆத்தி | கொடி |
| ஆல் | சார் |
| ஆவிரை | சே |
| இல்லம்—தேற்றாமரம் | ஞெமை |
| உதி | தடா |
| எகின்—புளியமரம் | நமை |
| எண்—எள் | நெல் |
| ஒடு | பனை |

பிடா
பீர்—பீர்க்கு
புளி
பூ
பூல்
மா
யா
விசை
வெதிர்—மூங்கில்
வேல்

### அளவு சம்பந்தமான பெயர்கள்

அரை
அளவு
ஆம்பல்
உரி
உழக்கு
எண்
கலம்
கா
குறை
தாமரை
தூணி
நாடுரி
நாழி
நிறை
பதக்கு
பனை
மா
வெள்ளம்

### உறுப்புகள்

அங்கை—உள்ளங்கை
அண்ணம்—மேல்வாய்
அண்பல்—மேல் வரிசைப் பல்
இடை நா
இதழ்
இமை
உந்தி—கொப்பூழ்
கண்
கை
தலை
நா
நாவிளிம்பு
நுனி நா
நெஞ்சு
பல்
மிடறு
முதல் நா
மூக்கு
வெரிந்—முதுகு

### பண்டம், இடம், நூல் முதலியவற்றைக் குறிக்கும் சொற்கள்

அட்டு—வெல்லம்
அந்தணர் மறை
அழன்—பிணம்
ஆ—பசு
ஆடூஉ—ஆண்
ஆண்
ஆப்பி—சாணம்
ஆன்—அவ்விடம், பசு
இரா
இருள்
இல்—இல்லை, வீடு
இலம்பாடு—வறுமை
ஈம்—சுடுகாடு
ஈன்—இவ்விடம்
உரும்—இடி
ஊ—தசை
ஊன்—தசை
எகின்—அன்னம்
எரு
கம்—தொழில்
காயம்—ஆகாயம்
கிளவி—சொல்
கிளை—இனம்
கீழ்
குயின்—மேகம்
கொல்—கொல்லுத் தொழில்
கோல்
செரு—போர்
செல்—இடி
சே—எருது
சொல்
தந்தை
தமிழ்
தாய்
தாழ்
தாழக்கோல்
திங்கள்—மாதம்
திசை
தெற்கு
தேன்
தேனிறுல்
நரம்பின்மறை—கந்தருவ வேதம்
நாய்—காய்
நாள்—நட்சத்திரம்
நிலா
பலகை
பஞட்டு—பனைவெல்லம்
பாழ்
பீ
புழன்
புள்—பறவை
பூதம்—ஐந்து பூதங்கள்
பெண்
பெண்டு—பெண்

பெற்றம்—எருது
பொன்
மக்கள்
மக—குழந்தை
மகடூஉ—பெண்
மகன்
மா—விலங்கு
மீ—மேலிடம்
மீன்
முறை
வண்டு
வளி—காற்று
வல்—சூது
வள்—கூர்மை
விண்
வெயில்

---